بسم الله الرحمن الرحيم

# நவீன வடிவங்களில் வட்டி

## பொருள் அட்டவணை

### வட்டிக்கு எதிரான எச்சரிக்கை

## விபரீதங்களும் தீர்வுகளும்

1. வட்டி என்றால் என்ன?
2. இனம் மாறினால் வட்டி ஏற்படும்
3. தெளிவான வட்டி
4. வியாபாரமும் வட்டியும் ஒன்றல்ல
5. வாடகையும் வட்டியும் ஒன்றல்ல
6. வட்டி ஏன் பாவமான தொழில்?
7. விலைவாசி உயர்வுக்கு காரணம்
8. 'பொருளாதார சீரழிவு
9. சிறிய வட்டிக்கும் அனுமதி இல்லை
10. அனைத்துப் பொருட்களிலும் வட்டி வரும்
11. திருந்துவோர் திருப்பிக்கொடுக்க வேண்டியதில்லை
12. வர வேண்டிய வட்டியை வாங்கலாகாது
13. வட்டி இல்லா கடன்
14. நட்டம் வராத வகையில் கடன் கொடுக்கலாம்
15. கடன் வாங்குவதை தவிர்க்க வேண்டும்
16. அழகிய முறையில் திருப்பிச் செலுத்துதல்
17. அன்பளிப்பு என்ற பெயரில் வட்டி
18. நிர்பந்தமான நிலையில் வட்டி

## தடைசெய்யப்பட்டவை

1. நாணய மாற்றுதல்
2. ஒத்திக்க விடுவது வட்டியாகும்
3. ஒத்திக்கு விடுவது வியாபாரமல்ல
4. அடைமானத்தில் வட்டி வரக் கூடாது

5. பராமரிப்புச் செலவுக்காக பயன்படுத்தலாம்
6. ஆயுள் காப்பீடு (லைஃப் இன்சூரன்ஸ்)
7. ஷரீஅத் பைனான்ஸ்
8. வங்கி தரும் வட்டி
9. தர்மம் செய்வதற்காக வட்டி வாங்குதல்
10. வட்டிப் பணத்தில் கழிவறை
11. வட்டிக்கு கடன் வாங்கி வழிபாடு செய்தல்
12. வங்கியில் வேலை செய்யலாமா?
13. முஸ்லிமல்லாதவர்கள் வட்டி வாங்க உதவி செய்தல்
14. ஃபிக்சட் டெபாசிட்
15. கடன் அட்டை (கிரடிட் கார்டு)
16. மல்டிலெவல் மார்க்கெட்டிங்
17. பங்குச் சந்தை மோசடி
18. தவணை வியாபாரம்
19. ஏலச் சீட்டு
20. பிராவிடண்ட் ஃபண்ட்

## அனுமதிக்கப்பட்டவை

1. மருத்துவக் காப்பீடு (மெடிக்கல் இன்சூரன்ஸ்)
2. மருத்துவக் காப்பீடு சூதாட்டமா?
3. வாகனக் காப்பீடு (வெஹிகல் இன்சூரன்ஸ்)
4. குலுக்கல் சீட்டு
5. வங்கியுடன் வியாபார ஒப்பந்தம்
6. வங்கியில் பணத்தை சேமிக்கலாமா?
7. வட்டி வாங்குவோர் தரும் உணவை உண்ணலாமா?
8. வட்டிக்கு கடன் வாங்கி கட்டிய வீடு

9. உழைக்காமல் லாபம் வாங்கலாமா?

10. வட்டியில் மாட்டிக் கொண்டவருக்கு உதவி செய்தல்

## முன்னுரை

இஸ்லாம் மனித சமுதாயத்துக்கு கேடு விளைவிக்கின்ற காரியங்களை முற்றிலுமாக தடைசெய்யக்கூடிய அற்புதமான மார்க்கம். மனிதனை துன்புறுத்துகின்ற அனைத்து பாவங்களும் இறைவனின் கோபத்திற்கும் சாபத்திற்கும் காரணமாக இருக்கின்றன.

மனிதன் தன்னுடைய சுயநலத்தாலும் குறை மதியினாலும் இது போன்ற பாவங்களை துணிந்து செய்யக்கூடியவனாக இருக்கின்றான். இத்தகைய பாவங்களில் வட்டி முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளது.

வட்டி மிகப்பெரிய பொருளதார சுரண்டலாகவும் மோசடியாகவும் இருப்பதால் இஸ்லாம் இதை முழுவதுமாக தடைசெய்துள்ளது. ஆனால் இன்றைய காலத்தில் இது சாதாரண வணிகம் என்று கூறி இதைத் தொழிலாக செய்பவர் அதிகம் இருக்கின்றனர்.

முஸ்லிம்மல்லாதவர்கள் தான் இவ்வாறு இருக்கின்றார்கள் என்றால் நமது சமுதாயத்திலும் பலர் இதை ஒரு பாவமாக கருதாமல் சர்வசாதாரணமாக இதன் மூலம் சம்பாதித்து வருகிறார்கள்.

தற்காலத்தில் வட்டி நவீன வடிவங்களில் பல்வேறு பெயர்களில் பரவியுள்ளது. வட்டி கூடாது என்றால் இந்த காலத்தில் வாழ்வது மிகவும் கடினம் என்று பலர் சொல்லும் அளவுக்கு அனைத்து துறைகளிலும் வட்டி ஆக்கிரமித்துள்ளது.

வட்டியைப் பற்றி சரியான தெளிவும் ஈமானிய உறுதியும் இல்லாதவர்கள் இதில் இலகுவாக சிக்கிவிடுகின்றனர். இப்படிப்பட்ட காலம் வரும் என்பதை நபி (ஸல்) அவர்கள் முன்கூட்டியே எச்சரித்துள்ளார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

தாம் சம்பாதித்தது ஹலாலா ஹராமா என்று மனிதர்கள் பொருட்படுத்தாத ஒரு காலம் வரும்.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)

நூல் : புகாரி (2083)

இஸ்லாமிய சமுதாயம் இந்த பாவத்தில் விழக்கூடாது என்றால் வட்டியைப் பற்றி தெளிவாக அறிந்திருப்பது அவசியம். இதற்கு இந்நூல் உதவியாக இருக்கும் என்று நம்புகிறேன்.

பல்வேறு பணிகளுக்கிடையில் தனியே நேரம் ஒதுக்கி இந்நூலை முழுமையாக வாசித்து சரிபார்த்துக்கொடுத்த பாசத்திற்குரிய பீஜே அவர்களுக்கு நன்றியை தெரிவித்துக்கொள்கிறேன்.

**இப்படிக்கு**

**எஸ். அப்பாஸ் அலீ எம்.ஐ.எஸ்.சி**

# வட்டிக்கு எதிரான எச்சரிக்கை

## வட்டி வாங்குவது ஹராம்

திருக்குர்ஆன் அருளப்படுவதற்கு முன் நபி (ஸல்) அவர்களின் காலத்தில் மக்கள் வட்டியின் மூலம் சம்பாதித்து வந்தனர். இதை அல்லாஹ் தடைசெய்து வசனங்களை இறக்கினான்.

அல்லாஹ் வியாபாரத்தை அனுமதித்து வட்டியைத் தடை செய்து விட்டான். தமது இறைவனிடமிருந்து தமக்கு அறிவுரை வந்த பின் (வட்டியிலிருந்து) விலகிக்

கொள்பவருக்கு முன் சென்றது உரியது. அவரைப் பற்றிய முடிவு அல்லாஹ்விடம் உள்ளது. மீண்டும் செய்வோர் நரகவாசிகள். அதில் நிரந்தரமாக இருப்பார்கள்.

அல்குர்ஆன் (2:275)

ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

'அல்பகரா' அத்தியாயத்தின் (வட்டி தொடர்பான) இறுதி வசனங்கள் (2:275 – 281) அருளப் பெற்றபோது, அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் புறப்பட்டுச் சென்று அவற்றை மக்களுக்கு ஓதிக்காட்டினார்கள். பிறகு மதுபான வியாபாரத்தைத் தடை செய்தார்கள்.

நூல் : முஸ்லிம் (3221)

**முன்வாழ்ந்த சமூகத்தாருக்கும் வட்டி ஹராம்**

நபி (ஸல்) அவர்கள் வருவதற்கு முன் வாழந்த யூத கிரிஸ்தவ சமூகத்தாருக்கு அல்லாஹ் நபிமார்களை அனுப்பினான். இந்த நபிமார்கள் வட்டி வாங்குவதை விட்டும் யூதர்களை தடுத்தனர்.

யூதர்கள் செய்த அநீதியின் காரணமாகவும், அல்லாஹ்வின் பாதையை விட்டும் அதிகமானோரை அவர்கள் தடுத்ததன் காரணமாகவும், வட்டியை விட்டு அவர்கள் தடுக்கப்பட்டிருந்தும் வட்டி வாங்கியதாலும், மக்களின் செல்வங்களைத் தவறான முறையில் அவர்கள் சாப்பிட்டதாலும் அவர்களுக்கு அனுமதிக்கப்பட்டிருந்த தூய்மையானவற்றை அவர்களுக்கு விலக்கினோம். அவர்களில் (நம்மை) மறுப்போருக்குத் துன்புறுத்தும் வேதனையைத் தயாரித்துள்ளோம்.

அல்குர்ஆன் (4 : 160)

எனவே வட்டி என்ற பெரும்பாவம் ஆரம் காலம் முதலே இறைவனால் தடுக்கப்பட்டுவிட்டது.

### வட்டி கொடுப்பதும் ஹராம்

இன்றைக்கு பலர் வட்டி வாங்குவது மட்டுமே பாவமான செயல் என்றும் வட்டி கொடுப்பது பாவமல்ல என்றும் தவறாக நினைக்கின்றார்கள். ஆனால் நபி (ஸல்) அவர்கள் வட்டிக் கொடுப்பதையும் வன்மையாக கண்டித்துள்ளார்.

அபூ ஜுஹைஃபா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

நபி (ஸல்) அவர்கள் வட்டி கொடுப்பதை தடை செய்தார்கள்!

நூல் : புகாரி (2086)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

இ(ந்த வட்டிப் பாவத்)தில் வாங்கியவரும் கொடுத்தவரும் சமமானவர்கள் ஆவர்.

இதை அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நூல் : முஸ்லிம் (3234)

ஹாகிமில் இடம்பெற்றுள்ள ஒரு அறிவிப்பில் வட்டிப்பாவத்தில் இவ்விருவரும் சமமானவர்கள் என்ற வாசகம் இடம்பெற்றுள்ளது.

ஜாபிர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், வட்டி வாங்குபவரையும் வட்டி கொடுப்பவரையும், அதற்குக் கணக்கு எழுதுபவரையும் அதன் இரு சாட்சிகளையும் சபித்தார்கள். மேலும், “இவர்கள் அனைவரும் (பாவத்தில்) சமமானவர்கள் ஆவர்” என்று கூறினார்கள்.

நூல் : முஸ்லிம் (3258)

### அறியாமைக்கால கலாச்சாரம்

இஸ்லாத்தை அறியாத அறியாமைக் கால மக்கள் வட்டி வாங்கி வந்தனர். இதை இஸ்லாம் தடைசெய்தது. எனவே இதற்குப் பிறகும் வட்டி வாங்குபவர்கள் உண்மை முஸ்லிமாக இருக்க முடியாது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

அறியாமைக் காலத்தில் இருந்த வட்டியும் என் பாதங்களுக்குக் கீழே புதைக்கப்படுகிறது. (அவற்றையும் நான் தள்ளுபடி செய்கிறேன்.) நம்மவர் கொடுத்திருந்த வட்டிகளில் முதற்கட்டமாக (என் பெரிய தந்தை) அப்பாஸ் பின் அப்தில் முத்தலிபிற்கு வரவேண்டிய வட்டியை நான் தள்ளுபடி செய்கிறேன். அதில் (அசலைத் தவிர) கூடுதலான தொகை அனைத்தும் தள்ளுபடி செய்யப்படுகிறது.

நூல் : முஸ்லிம் (2334)

### வட்டி வாங்குவது யூதர்களின் கலாச்சாரம்

அல்லாஹ்வின் கோபத்தைப் பெற்ற யூதர்களே வட்டியில் மூழ்கிக் கிடந்தனர். எனவே வட்டி வாங்குபவர்கள் யூதக் கலாச்சாரத்தையே பின்பற்றுகின்றனர்.

யூதர்கள் செய்த அநீதியின் காரணமாகவும், அல்லாஹ்வின் பாதையை விட்டும் அதிகமானோரை அவர்கள் தடுத்ததன் காரணமாகவும், வட்டியை விட்டு அவர்கள் தடுக்கப்பட்டிருந்தும் வட்டி வாங்கியதாலும், மக்களின் செல்வங்களைத் தவறான முறையில் அவர்கள் சாப்பிட்டதாலும் அவர்களுக்கு அனுமதிக்கப்பட்டிருந்த தூய்மையானவற்றை அவர்களுக்கு விலக்கினோம். அவர்களில் (நம்மை) மறுப்போருக்குத் துன்புறுத்தும் வேதனையைத் தயாரித்துள்ளோம்.

அல்குர்ஆன் (4 : 161)

## அழித்தொழிக்கும் பெரும்பாவம்

வட்டி நம்முடைய மறுமை வாழ்வை அழித்து நாசமாக்கக்கூடிய பெரும்பாவங்களில் ஒன்றாகும்.

அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

"அழித்தொழிக்கும் ஏழு பெரும் பாவங்களைத் தவிருங்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். மக்கள், "அல்லாஹ்வின் தூதரே! அவை எவை?" என்று கேட்டார்கள். நபி (ஸல்) அவர்கள், "அல்லாஹ்வுக்கு இணை கற்பிப்பதும், சூனியம் செய்வதும், நியாயமின்றி கொல்லக் கூடாது என்று அல்லாஹ் புனிதப்படுத்தியுள்ள உயிரைக் கொல் வதும், வட்டி உண்பதும், அனாதைகளின் செல்வத்தை உண்பதும், போரின் போது புறமுதுகிட்டு ஓடுவதும் அப்பாவிகளான, இறைநம்பிக்கை கொண்ட, கற்புள்ள பெண்களின் மீது அவதூறு கூறுவதும் தான் (அந்தப் பெரும் பாவங்கள்)" என்று (பதில்) கூறினார்கள்.

நூல் : புகாரி (2766)

## இறைவனுடன் போர் செய்வதற்கு நிகாரான பாவம்

வட்டி வாங்குவது இறைவனுடன் போர் செய்வதற்கு நிகரான பாவம் என்று குர்ஆன் கூறுகின்றது. இந்த வகையில் மற்ற பாவங்களை விட்டும் வட்டி வேறுபட்டு பெரும்பாவமாக உள்ளது.

தந்தை ஒரு வேலையை செய்யுமாறு மகனிடம் கூறினால் அந்த மகன் அதை செய்யாமல் இருப்பது குற்றமாகும். ஆனால் இந்த வேலையை செய்யாததோடு தந்தையிடம் சண்டைக்குச் செல்வது அதைவிடவும் பயங்கரமான குற்றமாகும். வட்டி வாங்குவோர் இப்படிப்பட்ட பயங்கரமான பாவத்தை செய்துகொண்டிருக்கின்றனர்.

அல்லாஹ்வுடனும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடனும் போர் செய்பவன் மிகப் பெரிய பாவியாகவும் மறுமை வாழ்வில் கடுமையான தண்டனையை அடையக்கூடியவனாகவும் இருக்கின்றான். இவன் ஒருக்காலத்திலும் வெற்றியை அடைய முடியாது. வட்டி வாங்குவோர் இந்நிலையில் இருப்பதாக குர்ஆன் சொல்லிக்காட்டுகின்றது.

அவ்வாறு நீங்கள் செய்யாவிட்டால் அல்லாஹ்விடமிருந்தும், அவனது தூதரிடமிருந்தும் போர்ப் பிரகடனத்தை உறுதி செய்து கொள்ளுங்கள்! நீங்கள் திருந்திக் கொண்டால் உங்கள் செல்வங்களில் மூலதனம் உங்களுக்கு உரியது. நீங்களும் அநீதி இழைக்கக் கூடாது. உங்களுக்கும் அநீதி இழைக்கப்படாது.

அல்குர்ஆன் 2 : 275

மேலும் இந்த வசனத்தில் நீங்கள் அநீதி இழைக்கக்கூடாது என்று அல்லாஹ் கூறுகிறான். வட்டி வாங்குவது மக்களுக்கு செய்யும் அநியாயம் என்பதை இதன் மூலம் அறிய முடிகின்றது.

அடுத்தவரின் பொருளை அநியாயமாக உண்டவர்களுக்கு மறுமையில் கொடுக்கப்படும் அனைத்து தண்டனைகளும் வட்டி வாங்கியவருக்கும் கொடுக்கப்படும்.

**வட்டி வாங்குபவர்கள் சாபத்திற்குரியவர்கள்**

நபி (ஸல்) அவர்கள் வட்டி வாங்குபவரையும் வட்டிக் கொடுப்பவரையும் சபித்துள்ளார்கள்.

அபூஜுஹைஃபா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

வட்டி உண்பவனையும், வட்டி உண்ணக் கொடுப்பவனையும் நபி (ஸல்) அவர்கள் சபித்தார்கள்.

நூல் : புகாரி (5347)

## வட்டிக்குத் துணைபோவோரும் சாபத்திற்குரியவர்கள்

பொதுவாக எந்த பாவமான காரியத்துக்கும் உதவி செய்வது கூடாது. குறிப்பாக வட்டி என்ற பெரும்பாவத்தில் அறவே சம்பந்தப்படக்கூடாது. வட்டியுடன் தொடர்புடைய அனைவரும் நபி (ஸல்) அவர்களின் சாபத்திற்குரியவர்களாக இருக்கின்றார்கள்.

ஜாபிர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், வட்டி வாங்குபவரையும் வட்டி கொடுப்பவரையும், அதற்குக் கணக்கு எழுதுபவரையும் அதன் இரு சாட்சிகளையும் சபித்தார்கள். மேலும், “இவர்கள் அனைவரும் (பாவத்தில்) சமமானவர்கள் ஆவர்” என்று கூறினார்கள்.

நூல் : முஸ்லிம் (3258)

## வட்டி வாங்குவோர் நன்றிகெட்டவர்கள்

பிறருக்கு உதவ வேண்டும் என்பதற்காகத் தான் அல்லாஹ் செல்வந்தர்களுக்கு கணக்கில்லாமல் வாரி வழங்குகின்றான். இறைவன் விரும்பக்கூடிய வழியில் செல்வத்தை செலவழிப்பது இறைவனுக்கு நன்றி செலுத்துவதாகும்.

ஆனால் இந்த செல்வத்தை இறைவன் கடுமையாக வெறுக்கின்ற வட்டித் தொழிலில் இட்டு பெறுக்குபவர்கள் நன்றிகெட்டவர்கள் என்றும் பாவிகள் என்றும் குர்ஆன் கூறுகின்றது.

அல்லாஹ் வட்டியை அழிக்கிறான். தர்மங்களை வளர்க்கிறான். நன்றி கெட்ட எந்தப் பாவியையும் அல்லாஹ் விரும்ப மாட்டான்.

அல்குர்ஆன் (2 : 276)

**வட்டி வாங்குவோர் இறைநம்பிக்கையாளர் இல்லை**

உண்மையான இறைநம்பிக்கையாளர்கள் வட்டி வாங்கமாட்டார்கள். இவ்வாறு பின்வரும் வசனத்தில் அல்லாஹ் கூறுகிறான்.

நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்வை அஞ்சுங்கள்! நீங்கள் நம்பிக்கை கொண்டிருந்தால் வர வேண்டிய வட்டியை விட்டு விடுங்கள்!

அல்குர்ஆன் (2 : 278)

**வட்டியை உண்போர் பைத்தியமாக எழுப்பப்படுவர்**

இந்த உலகத்தில் வட்டி வாங்கி பலருக்கு மன உலைச்சலை ஏற்படுத்தியவர்கள் மறுமை நாளில் பைத்தியமாக எழுப்பப்படுவார்கள்.

வட்டியை உண்போர் (மறுமை நாளில்) ஷைத்தான் தீண்டியவனைப் போல் பைத்தியமாகவே எழுவார்கள்.

அல்குர்ஆன் (2:275)

**வட்டி வாங்குவோர் நிரந்தர நரகத்திற்குரியவர்கள்**

இணைவைப்பு கொலை போன்ற பெரும்பாவங்களை செய்பவர்களே நிரந்தரமாக நரகத்தில் கிடப்பார்கள். வட்டி இதுபோன்ற பெரும்பாவம் என்பதால் இதற்கும் அல்லாஹ் நிரந்தர நரகத்தை தண்டனையாக வழங்குகிறான். வட்டி வாங்குவோர் ஒருக்காலும் சொர்க்கத்திற்குச் செல்ல முடியாது. நரகத்தை விட்டு வெளியேற முடியாது.

அல்லாஹ் வியாபாரத்தை அனுமதித்து வட்டியைத் தடை செய்து விட்டான். தமது இறைவனிடமிருந்து தமக்கு அறிவுரை வந்த பின் (வட்டியிலிருந்து) விலகிக் கொள்பவருக்கு முன் சென்றது உரியது. அவரைப் பற்றிய முடிவு அல்லாஹ்விடம் உள்ளது. மீண்டும் செய்வோர் நரகவாசிகள். அதில் நிரந்தரமாக இருப்பார்கள்.

அல்குர்ஆன் (2:275)

**நரகத்தில் இறைமறுப்பாளர்களுடன் இருப்பார்கள்**

வட்டி வாங்குவோருக்கு இறைமறுப்பாளர்களுக்குத் தயாரிக்கப்பட்டுள்ள நரகம் உண்டு என்று அல்லாஹ் எச்சரிக்கின்றான்.

நம்பிக்கை கொண்டோரே! பன் மடங்காகப் பெருகிக் கொண்டிருக்கும் நிலையில் வட்டியை உண்ணாதீர்கள்! அல்லாஹ்வை அஞ்சுங்கள்! இதனால் வெற்றி பெறுவீர்கள். (ஏக இறைவனை) மறுப்போருக்காகத் தயாரிக்கப்பட்டுள்ள நரகத்தை அஞ்சுங்கள்!

அல்குர்ஆன் (3 : 130)

**வட்டி வாங்கியோர் இரத்த ஆற்றில் கல்லடிபடுவார்கள்**

இந்த உலகத்தில் வட்டி வாங்கி மக்களின் இரத்தத்தை உறிஞ்சியவர்கள் மறுமையில் இரத்த ஆற்றில் விடப்படுவார்கள். அந்த இரத்தத்திலிருந்து அவர்கள் வெளியே வர முயற்சி செய்யும் போதேல்லாம் அவர்களின் வாயில் கல்லால் அடிக்கப்படும். அதிலிருந்து அவர்களால் வெளியே வர இயலாது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

இன்றிரவு (கனவில்) இரண்டு மனிதர்களைக் கண்டேன். அவர்கள் என்னிடம் வந்து தூய்மையான ஒரு நிலப்பகுதிக்கு என்னை அழைத்துச் சென்றனர். நாங்கள் நடந்து வந்தபோது இரத்த ஆறு ஒன்றை அடைந்தோம். ஆற்றில் ஒருவர்

நின்றுகொண்டிருந்தார். ஆற்றின் நடுவில் மற்றொருவர் தமக்கு முன்னே கற்களை வைத்துக்கொண்டு நின்றுகொண்டிருந்தார். ஆற்றிலே உள்ளவர் வெளியேற முனையும்போது, அவர் வாயில் (ஆற்றின் நடுவில்) நின்றுகொண்டிருந்தவர் கல்லை எறிந்து அவர் முன்பு நின்ற இடத்திலேயே அவரைக் கொண்டுபோய் நிறுத்தினார். அவர் வெளியேற வரும்போதெல்லாம் இவர் அவரது வாயில் கல்லை எறிய, அதனால் அவர் முன்பிருந்த இடத்திற்கே திரும்பிச் சென்று கொண்டிருந்தார்!

அவர் யார்? என்று (என்னை அழைத்துச் சென்றவர்களிடம்) நான் கேட்டேன்: அதற்கவர்கள் ஆற்றில் நீர் பார்த்தவர் வட்டி உண்பவராவார்! எனக் கூறினார்கள். இதை சமுரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நூல் : புகாரி (2085)

**அழிவு நிச்சயம்**

வட்டித் தொழில் செய்தால் செல்வம் பன்மடங்கு பெருகுவதைப் போன்று நமக்குத் தெரிந்தாலும் அதில் இறைவன் பரகத் எனும் மறைமுக அருளை எடுத்துவிட்டான். வேறு வகையில் அவர்களுக்கு இழப்புகளையும் துன்பங்களையும் அல்லாஹ் கொடுப்பான். அவர்களால் நிம்மதியான வாழ்க்கை வாழ முடியாது.

அல்லாஹ் வட்டியை அழிக்கிறான். தர்மங்களை வளர்க்கிறான். நன்றி கெட்ட எந்தப் பாவியையும் அல்லாஹ் விரும்ப மாட்டான்.

அல்குர்ஆன் (2 : 276)

மனிதர்களின் செல்வங்களைப் பெருக்கிக் கொள்வதற்காக நீங்கள் வட்டிக்கு கொடுப்பது அல்லாஹ்விடம் பெருகுவதில்லை. அல்லாஹ்வின் முகத்தை நாடி ஸகாத் கொடுப்பீர்களானால் இத்தகையோரே பெருக்கிக் கொண்டவர்கள்.

அல்குர்ஆன் (30 : 39)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

ஒருவர் வட்டியின் மூலம் பொருளாதாரத்தை அதிகரித்துக்கொண்டால் அதன் இறுதி முடிவு அழிவைத் தவிர வேறு இல்லை.

அறிவிப்பவர் : இப்னு மஸ்ஊத் (ரலி)

நூல் : இப்னு மாஜா (2270)

இறைவன் வட்டியை அழிக்கிறான் என்பதற்கு சிறந்த உதாரணமாக தற்போது வட்டியினால் அமேரிக்கா போன்ற பணக்கார நாடுகளுக்கு ஏற்பட்ட பொருளாதாரச் சரிவை கூறலாம்.

**அல்லாஹ்வின் கருணை கிடைக்காது**

மனிதர்களுக்கு கருணை காட்டுபவர்களுக்கு அல்லாஹ் கருணை காட்டுவான். மனிதர்களிடத்தில் இரக்கமில்லாமல் நடந்தால் அல்லாஹ்வும் இரக்கம் காட்ட மாட்டான். வட்டி வாங்குவது கருணையற்றவர்களின் செயலாகும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

மனிதர்கள் மீது கருணைகாட்டாதவனுக்கு அல்லாஹ் கருணைகாட்ட மாட்டான்.

இதை ஜரீர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நூல் : புகாரி (7376)

ஒரு ஊரில் வட்டிப் பெருகிவிட்டால் அல்லாஹ் அவ்வூரார் மீது கோபம் கொண்டு தன் வேதனையை இறக்கிவைத்துவிடுவான்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

ஒரு ஊரில் விபச்சாரமும் வட்டியும் பெருகிவிட்டால் அவ்வூரார் அல்லாஹ்வின் வேதனை தங்கள் மீது இறங்க வழிவகை செய்துவிடுகிறார்கள்.

அறிவிப்பவர் : இப்னு அப்பாஸ் (ரலி)

நூல் : ஹாகிம் (2202)

**வட்டி வாங்குவோரின் பிரார்த்தனை ஏற்கப்படாது**

ஹராமான சம்பாத்தியத்தை உண்பவர்கள் பிரார்த்தனை செய்தால் அந்த பிரார்த்தனையை அல்லாஹ் ஏற்கமாட்டான்.

அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "மக்களே! அல்லாஹ் தூயவன். தூய்மையானதையே அவன் ஏற்கின்றான். அல்லாஹ் தன்னுடைய தூதர்களுக்குக் கட்டளையிட்ட வற்றையே இறைநம்பிக்கையாளர்களுக்கும் கட்டளையிட்டுள்ளான்" என்று கூறினார்கள்.

பிறகு ஒரு மனிதரைப் பற்றிச் சொன்னார்கள். "அவர் தலைவிரி கோலத்துடனும் புழுதி படிந்த நிலையிலும் நீண்ட பயணம் மேற் கொள்கிறார். அவர் தம் கரங்களை வானை நோக்கி உயர்த்தி 'என் இறைவா, என் இறைவா' என்று பிரார்த்திக்கிறார். ஆனால், அவர் உண்ணும் உணவு தடை செய்யப்பட்டதாக இருக்கிறது; அவர் அருந்தும் பானம் தடை செய்யப்பட்டதாக இருக்கிறது; அவர் அணியும் உடை தடை செய்யப்பட்டதாக இருக்கிறது; தடை செய்யப்பட்ட உணவையே அவர் உட்கொண்டிருக்கிறார். இத்தகையவருக்கு எவ்வாறு (அவரது பிரார்த்தனை) ஏற்கப்படும்?" என்று கூறினார்கள்.

முஸ்லிம் (1844)

# விபரீதங்களும் தீர்வுகளும்

**வட்டி என்றால் என்ன?**

வட்டி குறித்து நபி (ஸல்) அவர்கள் தெளிவான விளக்கத்தை கொடுத்துள்ளார்கள். இந்த விளக்கத்தை அடிப்படையாகக் கொண்டு ஹலாலான தொழில் எது? ஹரமான தொழில் எது? என்பதை நம்மால் கண்டுகொள்ள முடியும்.

நபிமொழிகளை படிக்கும் போது வட்டி இரண்டு வகைப்படும் என்பதை அறியலாம்.

ஒரே இனத்தைச் சார்ந்த பொருட்களில் கொடுக்கல் வாங்கல் நடைபெறும் போது அந்த கொடுக்கல் வாங்கல் சம அளவில் இருக்க வேண்டும். கூடுதல் குறைவுடன் இருக்கக்கூடாது.

உதாரணமாக மட்டமான இரண்டு கிலோ பேரீச்சம் பழங்களைக் கொடுத்து தரமான ஒரு கிலோ பேரீச்சம் பழங்களை வாங்குவது கூடாது. இந்த பொருள் மாற்றம் உடனுக்குடன் நடந்தாலும் கூடாது. தவணை அடிப்படையில் நடந்தாலும் கூடாது. இது முதல் வகை வட்டியாகும். பின்வரும் நபிமொழிகள் இதற்கு சான்றாக அமைந்துள்ளது.

அபூபக்ரா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

நபி (ஸல்) அவர்கள் வெள்ளிக்கு வெள்ளியை, தங்கத்திற்குத் தங்கத்தைச் சரிக்கு சரியாகத் தவிர விற்கக் கூடாது என்று தடை விதித்தார்கள். தங்கத்திற்கு வெள்ளியை நாங்கள் விரும்பியவாறு விற்பதற்கும் வெள்ளிக்குத் தங்கத்தை நாங்கள் விரும்பியவாறு விற்பதற்கும் அனுமதித்தார்கள்.

நூல் : புகாரி (2182)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

சரிக்குச் சரியாகவே தவிர, தங்கத்திற்குத் தங்கத்தை விற்காதீர்கள்! சரிக்குச் சரியாகவே தவிர, வெள்ளிக்கு வெள்ளியை விற்காதீர்கள்! தங்கத்திற்கு வெள்ளியையும், வெள்ளிக்குத் தங்கத்தையும் விரும்பியவாறு விற்றுக்கொள்ளுங்கள்.

இதை அபூபக்ரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நூல் : புகாரி (2175)

உபாதா பின் அஸ்ஸாமித் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

"அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் 'தங்கத்தைத் தங்கத்திற்கு விற்பதையும் வெள்ளியை வெள்ளிக்கும், தொலிநீக்கப்பட்ட கோதுமையைத் தொலி நீக்கப்பட்ட கோதுமைக்கும், தொலிநீக்கப்படாத கோதுமையைத் தொலிநீக்கப்படாத கோதுமைக்கும், பேரீச்சம் பழத்தைப் பேரீச்சம் பழத்திற்கும், உப்பை உப்பிற்கும் விற்பதைத் தடை செய்தார்கள்; உடனுக்குடன் சரிக்குச் சரியாக மாற்றிக்கொண்டால் தவிர. யார் அதைவிடக் கூடுதலாகக் கொடுக்கிறாரோ அல்லது கூடுதலாகக் கேட்கிறாரோ அவர் வட்டியைப் பெற்றவர் ஆவார் என்று கூறியதை நான் கேட்டுள்ளேன்" என்றார்கள்.

நூல் : முஸ்லிம் (3232)

அபூசயீத் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

பலதரப்பட்ட பேரீச்சம் பழங்களின் கலவை எங்களுக்கு வழங்கப்படும்; அதை ஒரு ஸாஉக்கு இரண்டு ஸாஉ என்ற அடிப்படையில் நாங்கள் விற்பனை செய்வோம். அப்போது நபி (ஸல்) அவர்கள், ஒரு ஸாஉக்கு இரண்டு ஸாஉம் கூடாது; இரண்டு திர்ஹங்களுக்கு ஒரு திர்ஹமும் கூடாது! என்று கூறினார்கள்.

நூல் : புகாரி (2080)

அபூசயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

நபி (ஸல்) அவர்களிடம் பிலால் (ரலி) அவர்கள் பர்னீ எனும் (மஞ்சளான, வட்டவடிவமான) உயர்ரக பேரீச்சம் பழத்தைக் கொண்டு வந்தார்கள். அவர்களிடம் இது எங்கிருந்து கிடைத்தது? என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். அதற்கு பிலால் (ரலி) அவர்கள், என்னிடம் மட்டரக பேரீச்சம் பழம் இருந்தது; நபி (ஸல்) அவர்களுக்கு உண்ணக் கொடுப்பதற்காக அதில் இரண்டு ஸாஉவைக் கொடுத்து அதில் ஒரு ஸாஉ வாங்கினேன்! என்றார்கள். அப்போது நபி (ஸல்) அவர்கள், **அடடா! இது வட்டியேதான்! இது வட்டியேதான்!** இனி இவ்வாறு செய்யாதீர்! நீர் (உயர்ரக பேரீச்சம் பழத்தை) வாங்க விரும்பினால் உம்மிடம் இருக்கும் பேரீச்சம் பழத்தை மற்றொரு வியாபாரத்தின் வாயிலாக விற்றுவிட்டு, பிறகு அதை வாங்குவீராக! என்றார்கள்.

நூல் : புகாரி (2312)

தரம் குறைந்த பேரீச்சம் பழத்தைக் கொடுத்து தரமான பேரீச்சம் பழத்தை வாங்குவதில் என்ன தவறு இருக்கின்றது? இங்கே பொருளுடைய தரம் வேறுபடுவதால் கூடுதலாக கொடுக்கப்படுகின்றது. இது எப்படி வட்டியாகும்? என்று சந்தேகம் எழலாம்.

வெளிப்படையில் பார்த்தால் இது வட்டி இல்லை என்றாலும் வட்டியினுடைய சாயல் இதில் இருப்பதால் மார்க்கம் இதையும் வட்டியுடன் சேர்த்துள்ளது. வட்டியின் வாடை கூட தென்படக்கூடாது என்பதற்காக இந்த கொடுக்கல் வாங்கலை நபியவர்கள் தடைசெய்துள்ளார்கள்.

அப்படியானால் தரம் குறைந்த பேரீச்சம் பழம் வைத்திருப்பவர் அதற்கு பதிலாக தரமான பேரீச்சம் பழங்களை வாங்க முடியாதா? என்று சிலருக்கு கேள்வி ஏழலாம். இதற்கான பதிலாக மேற்கண்ட ஹதீஸின் இறுதியில் உம்மிடம் இருக்கும்

பேரீச்சம் பழத்தை மற்றொரு வியாபாரத்தின் வாயிலாக விற்றுவிட்டு, பிறகு அதை வாங்குவீராக! என்று நபி (ஸல்) அவர்கள் தெளிவுபடுத்துகின்றார்கள்.

நம்மிடம் உள்ள பேரீச்சம் பழத்தை ஒரு மதிப்பு போட்டு முதலில் விற்க வேண்டும். பிறகு அந்த பணத்தை வைத்து தரமான பேரீச்சம் பழத்தை வாங்கிக்கொள்ளலாம்.

## இனம் மாறினால் வட்டி ஏற்படும்

தங்கத்தைக் கொடுத்து வெள்ளியை வாங்கலாம். வெள்ளியை கொடுத்து தங்கத்தை வாங்கலாம். ஆனால் இந்த வியாபாரம் கடனாக இல்லாமல் உடனுக்குடன் நடக்க வேண்டும்.

உதாரணமாக 10 கிராம் தங்கத்தை கடனாக பெற்றுக்கொண்டு ஒரு மாதம் கழித்து 100 கிராம் வெள்ளி தருகிறேன் என்று ஒப்பந்தம் செய்யக்கூடாது. அதே நேரத்தில் 100 கிராம் வெள்ளி கொடுத்து 10 கிராம் தங்கத்தை கடனில்லாமல் உடனுக்குடன் வாங்கினால் இது தவறு கிடையாது.

அபுல் மின்ஹால் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள் :

நான் நாணயமாற்று வியாபாரம் செய்துவந்தேன்; அது பற்றி(ய மார்க்கச் சட்டத்தை) ஸைத் பின் அர்கம் (ரலி), பராஉ பின் ஆஸிப் (ரலி) ஆகியோரிடம் கேட்டேன். அதற்கவர்கள், நாங்கள் நபி (ஸல்) அவர்களது காலத்தில் வியாபாரிகளாக இருந்தோம்: அவர்களிடம் நாணயமாற்று வியாபாரம் பற்றிக் கேட்டோம்; அதற்கு உடனுக்குடன் மாற்றிக்கொண்டால் அதில் தவறில்லை; தவணையுடன் இருந்தால் அது கூடாது என அவர்கள் பதிலளித்தார்கள் என்றார்கள்.

நூல் : புகாரி (2061)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

தங்கக்கட்டியை தங்கக்கட்டிக்கும் தங்க நாணயத்தை தங்க நாணத்துக்கும் வெள்ளிக்கட்டியை வெள்ளிக்கட்டிக்கும் வெள்ளி நாணயத்தை வெள்ளி நாணயத்துக்கும் தொலி நீக்கப்பட்ட கோதுமையைத் தொலி நீக்கப்பட்ட கோதுமைக்கும், தொலி நீக்கப்படாத கோதுமையைத் தொலி நீக்கப்படாத கோதுமைக்கும், பேரீச்சம் பழத்தைப் பேரீச்சம் பழத்திற்கும், உப்பை உப்புக்கும் (சரிக்குச் சரியாக உடனுக்குடன்) விற்கலாம். யாரேனும் கூடுதலாகக் கொடுத்தாலோ, அல்லது கூடுதலாகக் கேட்டாலோ அவர் வட்டி வாங்கிவிட்டார். தங்கம் வெள்ளி ஆகிய இரண்டில் வெள்ளி அதிகமாக இருக்கும்பட்சத்தில் வெள்ளிக்கு பதிலாக தங்கத்தை உடனுக்குடன் விற்பது தவறல்ல. ஆனால் தவணை முறையில் விற்பது கூடாது. தொலி நீக்கப்பட்ட கோதுமை தொலி நீக்கப்படாத கோதுமை இவை இரண்டில் தொலி நீக்கப்படாத கோதுமை அதிகமாக இருக்கும் பட்சத்தில் தொலி நீக்கப்படாத கோதுமைக்குப் பதிலாக தொலிநீக்கப்பட்ட கோதுமையை உடனுக்குடன் விற்பது தவறல்ல. ஆனால் தவணை முறையில் விற்பது கூடாது.

இதை உபாதா பின் ஸாமித் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நூல் : அபூதாவுத் (2907)

## தெளிவான வட்டி

வட்டியில் இன்னொரு வகை உள்ளது. இது தெளிவான வட்டியாகும்.

நாம் ஒருவரிடத்தில் நம் பொருளை குறிப்பிட்ட காலம் கொடுத்து தவணைக்காலம் முடிந்தவுடன் அந்தப் பொருளை அப்படியே திருப்பி வாங்குவது கடனாகும். இதில் நாம் கொடுத்த பொருளை விட கடன்கொடுத்ததற்காக கூடுதலாக எதையும் பெறவில்லை. நம்மிடமிருந்து கடன் பெற்றவர் கடன் வாங்கியதற்காக கூடுதலாக எதையும் தரவில்லை.

அவர் நம்மிடமிருந்து எதை வாங்கினாரோ அதை அப்படியே திருப்பிக்கொடுக்கின்றார். எனவே இந்த வகையில் கடன்கொடுப்பதும் வாங்குவதும் இஸ்லாத்தில் அனுமதிக்கப்பட்டிருக்கின்றது.

ஆனால் இவ்வாறு பிறருக்கு கடன் கொடுக்கும் போது கடன் வாங்கியவர் நம்மிடம் வாங்கிய பொருளை திருப்பிக்கொடுப்பதுடன் கடன் பெற்றதற்காக கூடுதல் பணத்தையும் கொடுக்க வேண்டும் என்று கூறினால் அப்போது இந்தக் கடன் வட்டியாகி விடுகின்றது.

எனவே கடனுக்காக கூடுதலாக பணம் பெறுவது வட்டியாகும். இதை பின்வரும் நபிமொழிகள் தெளிவுபடுத்துகின்றது.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

கடனில் தவிர வேறெதிலும் வட்டி ஏற்படாது.

அறிவிப்பவர் : உசாமா (ரலி)

நூல் : புகாரி (2178)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

பேரீச்சம் பழத்தைப் பேரீச்சம் பழத்திற்கும், தொலி நீக்கப்பட்ட கோதுமையைத் தொலி நீக்கப்பட்ட கோதுமைக்கும், தொலி நீக்கப்படாத கோதுமையைத் தொலி நீக்கப்படாத கோதுமைக்கும், உப்பை உப்புக்கும் சரிக்குச் சரியாக உடனுக்குடன் விற்கலாம். யாரேனும் கூடுதலாகக் கொடுத்தாலோ, அல்லது கூடுதலாகக் கேட்டாலோ அவர் வட்டி வாங்கிவிட்டார். அவற்றின் இனங்கள் வேறுபட்டிருந்தால் தவிர.

அறிவிப்பவர் : அபூஹுரைரா (ரலி)

நூல் : முஸ்லிம் (3235)

**வியாபாரமும் வட்டியும் ஒன்றல்ல**

வட்டிக்கும் வியாபாரத்துக்கும் இடையில் மிகப்பெரிய வேறுபாடுகள் உள்ளது. எனவே வட்டியும் வியாபாரமும் ஒன்று என்பது தறவானக் கூற்றாகும்.

வட்டியை உண்போர் (மறுமை நாளில்) ஷைத்தான் தீண்டியவனைப் போல் பைத்தியமாகவே எழுவார்கள். "வியாபாரம் வட்டியைப் போன்றதே" என்று அவர்கள் கூறியதே இதற்குக் காரணம். அல்லாஹ் வியாபாரத்தை அனுமதித்து வட்டியைத் தடை செய்து விட்டான்.

அல்குர்ஆன் (2:275)

வட்டி என்பது முன்னரே இவ்வளவு தான் என்று தீர்மானிக்கப்படுகிறது. ஆனால் வியாபாரத்தில் லாபம் என்பது இவ்வளவு தான் என்று முன்னரே உறுதி செய்ய முடியாது.

வட்டி என்பதில் நஷ்டம் என்ற பேச்சுக்கே இடமில்லை. வியாபாரத்தில் நஷ்டமும் ஏற்படலாம்.

வங்கியில் நாம் செலுத்தும் பணத்திற்கு வட்டி இவ்வளவு என்று செலுத்தும் போதே தெரிந்து விடுகிறது. வங்கி நஷ்டமடைந்தாலும் அந்தக் கூடுதல் பணம் வழங்கப்படுகிறது. கோடிக்கணக்கில் லாபம் அடைந்தாலும் நிர்ணயிக்கப்பட்டதை விட அதிகமாக வழங்குவதில்லை.

ஒரு பொருளை வியாபாரம் செய்தால் ஒரு முறை மட்டுமே அந்த பொருளில் லாபத்தை பெற முடியும். ஆனால் வட்டியில் ஒரு தொகையை அப்படியே வைத்துக்கொண்டு பல முறை கூடுதலாக பெற்றுக்கொண்டே இருக்க முடியும்.

வியாபாரத்தில் பொருளை வாங்கியவனும் பொருளை விற்றவனும் இவ்விருவரும் பயனடைகின்றனர். ஆனால் வட்டியில் கடன் வாங்கியவன் கூடுதல்

பணத்தை செலுத்துவதன் மூலம் நஷ்டம் அடைகிறான். கடன் கொடுத்தவன் அதைப் பெறுவதன் மூலம் லாபம் அடைகிறான்.

வியாபாரத்தில் பொருளுக்குரிய தொகை மட்டுமே வாங்கப்படுகின்றது. ஆனால் வட்டியில் கடன் கொடுத்த பொருளுடன் இன்னும் கூடுதல் தொகையும் சேர்த்து வாங்கப்படுகின்றது.

**வாடகையும் வட்டியும் ஒன்றல்ல**

நம்முடைய பணம் ஒருவரிடம் இருப்பதற்காக எவ்வளவு காலம் அவரிடம் இருக்கிறதோ அதற்கு ஏற்ப ஆதாயம் பெறுவது தான் வட்டி என்பது.

நம்முடைய பொருள் ஒருவரிடம் இருப்பதற்காக எவ்வளவு கால, அவரிடம் இருக்கிறதோ அதற்கு ஏற்ப ஆதாயம் அடைவது வாடகை எனப்படும்.

இரண்டும் ஒன்று போல் தோன்றினாலும். நமது பணத்தை ஒருவன் பயன்படுத்தினால் அதனால் பணத்தின் மதிப்பு குறையப் போவதில்லை. நோட்டு பழையதாக் ஆனாலும் பனத்தின் மதிப்பு குறையாது. பழைய நோட்டுகளுக்கும் புதிய நோட்டுகளுக்கும் மதிப்பு ஒன்று தான்.

ஆனால் ஒருவனது வீட்டை அல்லது வாகனத்தைப் பயன்படுத்தினால் அதனால் தேய்மானம் ஏற்படுகிறது. இந்த வகையில் வாடகையும் வட்டியும் வேறுபடுகிறது.

ஒருவனது பணத்தை நாம் ஏதோ ஒரு துறையில் பயன்படுத்தினால் அதில் லாபமும் நட்டமும் ஏற்படலாம். நிச்சயமான ஆதாயம் இல்லை. ஆனால் ஒரு பொருளை வாடகைக்கு எடுத்தால் அதை நாம் அனுபவித்து விடுவது நிச்சயமானது. எனவே வாடகையை வட்டி என்று கூறுவது ஏற்புடையது அல்ல.

## வட்டி ஏன் பாவமான தொழில்?

மருத்துவம் கல்வி உணவு போன்ற அத்தியாவசிய தேவைகளுக்காக கடன் வாங்க வேண்டிய இக்கட்டான நிலைக்கு ஏழை மக்கள் தள்ளப்படுகிறார்கள். வட்டித் தொழில் செய்பவர்கள் இவர்களின் இந்த நிர்ப்பந்தமான நிலையை பணம் சம்பாதிப்பதற்கு வாய்ப்பாக பயன்படுத்திக்கொள்கிறார்கள்.

வாங்கிய கடனை திருப்பிச் செலுத்துவதே இந்த ஏழைகளுக்கு கடினமாக இருக்கும் போது வாங்கியதை விட கூடுதலாக கொடுக்க வேண்டும் என்றால் சிரமப்படுபவர்களை மேலும் சிரமத்தில் சிக்க வைக்கும் மனிதநேயமற்ற செயலாக வட்டி உள்ளது.

இந்த ஏழை குறித்த காலத்துக்குள் கடனை அடைக்க முடியாமல் அவகாசம் கேட்டு தவணைக் காலத்தை நீட்டிக்குமாறு கோருவான். காலம் செல்ல செல்ல கடன் வாங்கியவனுக்கோ திண்டாட்டம். ஆனால் கடன் கொடுத்தவனுக்கோ கொண்டாட்டம்.

ஒரு நேரத்தில் இவன் செலுத்த வேண்டிய வட்டிப் பணம் இவன் வாங்கிய கடனை விட பன்மடங்காகப் பெருகிவிடும். சம்பாதிக்கும் பணத்தையெல்லாம் வட்டிக்கே செலவிட்டு வாழ்நாள் முழுவதும் ஏழையாகவே இருப்பான். சொல்லப்போனால் இவன் வட்டி வாங்குபவனுக்கு அடிமையாக மாறிவிடுவான். ஏழையின் இரத்தத்தை உறிஞ்சி வாழும் விசப் பூச்சியாக வட்டி வாங்குபவன் இருப்பான்.

பணம் கைக்கு வராவிட்டால் ஏழையின் வீட்டுக்குச் சென்று அவனை மானபங்கப்படுத்துவதும் ரவுடிகளை வைத்து மிரட்டுவதும் நடக்கின்றது. இதனால் கடன் வாங்கியவன் ஊரை விட்டே ஓடிவிடுகிறான். அல்லது குடும்பத்துடன் தற்கொலை செய்துகொள்கிறான்.

இப்படி பலருடைய வாழ்வை அழிக்கும் கொடும் பாவமாக வட்டி இருப்பதால் இஸ்லாம் இதைத் தடைசெய்துள்ளது.

**விலைவாசி உயர்வுக்கு காரணம்**

வட்டியை அடிப்படையாகக் கொண்ட பொருளாதாரம் விலை உயர்வுக்கான மிக முக்கியக் காரணமாகும். ஒரு பொருளை உற்பத்தி செய்யும் போது வட்டிக்குக் கடன் வாங்கி உற்பத்தி செய்பவர் விலையை ஏற்றினால் தான் வட்டி கட்ட முடியும் என்பதற்காக விலையை அதிகரித்து விடுவார்.

மேலும் வட்டிக்குக் கடன் கிடைப்பதால் வக்கற்றவர்களும் களத்தில் இறங்கி சொத்துக்களை வாங்க முயற்சிப்பதால் தேவைகள் அதிகரிக்கின்றன. குறைந்த பொருளுக்கு அதிகமானவர்கள் போட்டியிடும் நிலை ஏற்பட்டு இதன் காரணமாகவும் விலைவாசிகள் உயர்கின்றன.

தேவைக்கு மேல் பணம் வைத்திருப்பவர்கள் மட்டும் சொத்து வாங்க அலையும் போது போட்டி குறைவாக உள்ளதால் விலை சீராக இருக்கும். ஆனால் சாப்பட்டுக்கு வழி இல்லாதவர்களும் வட்டிக்குக் கடன் கிடைப்பதால் சொத்து வாங்க அலைகின்றனர். தங்களால் திருப்பிச் செலுத்த முடியாத நிலை இருந்தும் ஆடம்பரப் பொருள்களை வாங்கிக் குவிக்கின்றனர். இப்படி போட்டி அதிகமாகும் போது தானாகவே விலைகள் உயர்கின்றன.

ஆக வட்டி எனும் கொடிய சுரண்டல் காரணமாக இரண்டு வகைகளில் விலைவாசிகள் உயர்கின்றன. வட்டி அடிப்படையிலான பொருளாதாரம் தடுக்கப்பட்டால் பெரும்பாலான பொருட்கள் உடனே விலை குறைந்து விடும்.

## 'பொருளாதார சீரழிவு

பொருளாதார நெருக்கடி இன்று உலகையே தலைகீழாகப் புரட்டிப் போட்டுள்ளது. அமெரிக்காவில் ஏற்பட்ட இந்தப் புற்றுநோய் உலகின் பல நாடுகளிலும் மோசமான விளைவுகளை ஏற்படுத்தி வருகின்றது.

* மாதம் ஒன்றுக்கு ஆறு வங்கிகள் என்ற கணக்கில் அமெரிக்க வங்கிகள் திவால் அறிவிப்பு செய்கின்றன.

* கடன் கொடுப்பதை வங்கிகள் நிறுத்தியதால் கடனை நம்பி நடத்தப்பட்ட பல நிறுவனங்கள் மூடப்பட்டு வருகின்றன.

* இவ்வாறு மூடப்பட்டதால் அந்நிறுவனங்களில் பணிபுரிந்தவர்கள் மாதந்தோறும் மூன்று லட்சம் பேருக்கும் குறையாமல் வேலையிழந்து வருகின்றனர்.

* நூற்றுக்கு ஆறு பேர் வேலையில்லாமல் இருந்த நிலை மாறி நூற்றுக்கு எட்டு பேர் வேலையில்லாத நிலையை அடைந்துள்ளனர். இன்னும் சில மாதங்களில் நூற்றுக்குப் பத்து பேருக்கு வேலையில்லை என்ற நிலை ஏற்படும் என்று கணக்கிடப்பட்டுள்ளது.

* இப்படி இலட்சக்கணக்கான மக்கள் வேலையிழந்ததால் அவர்களின் வாங்கும் சக்தி வெகுவாகக் குறைந்து விட்டது. அத்தியாவசியமான பொருள்களுக்கு மட்டும் தான் மக்கள் செலவிடுகின்றனர்.

* இதன் காரணமாக ஆடம்பரப் பொருள்களின் தயாரிப்பில் ஈடுபட்டவர்களும் ஆட்குறைப்பு செய்கிறார்கள்; அல்லது நிறுவனத்தை மூடுகின்றனர்.

* இப்படி சங்கிலித் தொடராக வேலை இழப்புகளும், நிறுவனங்களின் கதவடைப்புகளும் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே வருகின்றன.

எப்போது எந்த வங்கி திவாலாகும் என்ற அச்சத்தினால் வங்கிகளில் போட்ட பணத்தை மக்களும், பண முதலைகளும் திரும்பப் பெற முயற்சிக்கின்றனர். ஆனால் வங்கிகள் திருப்பித் தரும் நிலையில் இல்லை. திவாலான வங்கிகளைத் தூக்கி நிறுத்துவதற்காக 70 ஆயிரம் கோடி டாலர் (முப்பத்தி ஐந்து லட்சம் கோடி ரூபாய்) அமெரிக்க அரசு ஒதுக்கியும் எந்த முன்னேற்றமும் இல்லை.

அரபு நாடுகள் எண்ணெய் உற்பத்தி செய்தாலும் அமெரிக்க நிறுவனங்கள் தான் விலையை நிர்ணயித்து கொள்ளை அடித்து வந்தன. எண்ணெய் விலையை ஏற்றி நெருக்கடியைச் சமாளிக்கலாம் என்றால் அதிலும் மண் விழுந்துள்ளது. பணப்புழக்கம் இல்லாததால் கார்கள் விற்பனையும், கார்கள் உபயோகமும் குறைந்து இதன் காரணமாக கச்சா எண்ணெய் விலை குறைந்து அரபு நாடுகளுடன் சேர்த்து அமெரிக்காவுக்கும் மரண அடி விழுந்துள்ளது.

அத்தியாவசியப் பொருட்களை மட்டும் மக்கள் வாங்குவதால் அதன் விலை ஏறிக் கொண்டே செல்லும் அதே வேளையில் ஆடம்பரப் பொருள்களான கார், பங்களாக்களின் விலை கற்பனை செய்ய முடியாத அளவுக்குக் குறைந்துள்ளது. எவ்வளவு குறைந்தாலும் அவற்றை வாங்க மக்களிடம் பணம் இல்லை.

இந்தப் பாதிப்பு அமெரிக்காவுடன் நின்று விடவில்லை. உலகின் பல நாடுகளிலும் பெரிய பாதிப்பை ஏற்படுத்தி விட்டன.

உலகின் மாபெரும் சந்தையாக இருந்த துபையில் பெரும்பாலான கட்டுமானப் பணிகள் நிறுத்தப்பட்டுள்ளன. அதைச் சார்ந்த தொழிலாளர்கள் வேலையிழந்துள்ளனர். வங்கிகள் நஷ்டமடைந்ததால் (அதாவது வட்டிக்குக் கடன் கொடுக்க பயந்ததால்) ஏராளமான வங்கிப் பணியாளர்கள் வேலை இழந்துள்ளனர். ரியல் எஸ்டேட் தொழில் சுத்தமாகப் படுத்துவிட்டது.

### சிறிய வட்டிக்கும் அனுமதி இல்லை

நம்பிக்கை கொண்டோரே! பன் மடங்காகப் பெருகிக் கொண்டிருக்கும் நிலையில் வட்டியை84 உண்ணாதீர்கள்! அல்லாஹ்வை அஞ்சுங்கள்! இதனால் வெற்றி பெறுவீர்கள்.

அல்குர்ஆன் (3 : 130)

இவ்வசனத்தில் (3:130) 'பன்மடங்காகப் பெருகும் வட்டியை உண்ணாதீர்கள்' என்று கூறப்பட்டுள்ளது. இதைத் தவறாக விளங்கிக் கொண்டு "சிறிய அளவிலான நியாயமான வட்டிக்கு அனுமதி உண்டு; கொடிய வட்டி, மீட்டர் வட்டி போன்றவை தான் கூடாது" என்று சிலர் வாதிடுகின்றனர்.

இவர்களின் வாதம் குர்ஆனைப் பற்றிப் போதிய அறிவு இல்லாததன் அடிப்படையில் எழுப்பப்படும் வாதமாகும்.

2:278 வசனத்தில் "வர வேண்டிய வட்டியை விட்டு விடுங்கள்" என்று அல்லாஹ் கூறுகிறான்.

"வர வேண்டிய வட்டியில் கொடும் வட்டியைத் தவிர்த்து விட்டு சிறிய அளவிலான வட்டியை மட்டும் வாங்கிக் கொள்ளுங்கள்" எனக் கூறாமல், "வர வேண்டிய வட்டியை விட்டு விடுங்கள்" என்று பொதுவாகக் கூறுவதால் சிறிய வட்டியும், பெரிய அளவிலான வட்டியும் தடுக்கப்பட்டுள்ளது என்பதை விளங்கலாம்.

2:279 வசனத்தில் "வட்டியிலிருந்து திருந்திக் கொள்பவர்களுக்கு அவர்களின் மூலதனம் மட்டுமே சொந்தம்" எனக் கூறப்படுகிறது. "மூலதனமும் சிறிய அளவிலான வட்டியும் சொந்தம்" என்று கூறப்படவில்லை. மாறாக வர வேண்டிய வட்டி அற்பமாக இருந்தாலும் அதைப் பெறாமல் கொடுத்த கடனை மட்டும் தான் வாங்க வேண்டும் என்று இவ்வசனம் கூறுகிறது.

அப்படியானால் "பன்மடங்காகப் பெருகும் வட்டியை உண்ணாதீர்கள்" என்று 3:130 வசனம் கூறுவது ஏன்?

பொதுவாக வட்டியின் தன்மையே இது தான். வியாபாரத்துக்கும் வட்டிக்கும் உள்ள வேறுபாடும் இது தான்.

அற்பமான வட்டிக்குக் கடன் கொடுத்தால் கூட நாட்கள் செல்லச் செல்ல அது பெருகிக் கொண்டே செல்லும். இரண்டு ஆண்டுகள் கழித்துப் பார்த்தால் வாங்கிய கடனை விட பல மடங்கு வட்டி அதிகமாகியிருப்பதைக் காணலாம்.

ஒரு பொருளை நாம் இலாபம் வைத்து விற்பனை செய்தால் அந்த ஒரு தடவை மட்டுமே அப்பொருள் மூலம் இலாபம் அடைகிறோம். ஆனால் ஒரு தொகையை வட்டிக்குக் கொடுத்தால் அந்தத் தொகையைத் திரும்பப் பெறும் வரை தொடர்ந்து பல தடவை இலாபம் அடைகிறோம்.

இதனால் தான் பன்மடங்காகப் பெருகும் வட்டி எனக் கூறப்படுகிறது. பெரிய வட்டி, கொடும் வட்டி என்ற கருத்தை இது தராது.

## அனைத்துப் பொருட்களிலும் வட்டி வரும்

பேரீச்சம் பழம் கோதுமை தங்கம் வெள்ளி உப்பு ஆகிய பொருட்களில் மட்டுமே வட்டி வரும். இவை தவிர வேறு பொருட்களில் வட்டி வராது என்று சிலர் தவறாக கூறி வருகின்றனர். இதற்கு இவர்கள் பின்வரும் ஹதீஸை ஆதாரமாக காட்டுகின்றனர்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

பேரீச்சம் பழத்தைப் பேரீச்சம் பழத்திற்கும், தொலிநீக்கப்பட்ட கோதுமையைத் தொலிநீக்கப்பட்ட கோதுமைக்கும், தொலிநீக்கப்படாத கோதுமையைத் தொலி நீக்கப்படாத கோதுமைக்கும், உப்பை உப்புக்கும் சரிக்குச் சரியாக உடனுக்குடன் விற்கலாம். யாரேனும் கூடுதலாகக் கொடுத் தாலோ, அல்லது கூடுதலாகக் கேட்டாலோ அவர் வட்டி வாங்கிவிட்டார். அவற்றின் இனங்கள் வேறுபட்டிருந்தால் தவிர.

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நூல் : முஸ்லிம் (3235)

குர்ஆன் ஹதீஸைப் பற்றிய அறிவில்லாதவர்களும் சிந்திக்கும் திறனற்றவர்களும் தான் இப்படிப்பட்ட வாதத்தை வைப்பார்கள்.

இந்த ஹதீஸில் இவர்கள் கூறுவது போன்று குறிப்பிட்ட இந்தப் பொருட்களில் மட்டுமே வட்டி வரும். வேறு எதிலும் வட்டி வராது என்று நபி (ஸல்) அவர்கள் வரையறுத்துக் கூறவில்லை.

ஒரே இனமாக உள்ள பொருட்களில் கொடுக்கல் வாங்கல் நடைபெறும் போது கூடுதல் குறைவின்றி கொடுக்க வேண்டும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறுகிறார்கள். இதற்கு உதாரணமாகத் தான் பேரீச்சம் பழம் கோதுமை உப்பு ஆகிய பொருட்களைக் குறிப்பிட்டார்கள்.

வட்டி என்ற காரணத்துக்காகவே நபி (ஸல்) அவர்கள் இவ்வாறு விற்பனை செய்வதை தடைசெய்கிறார்கள். இந்தக் காரணம் இந்த ஹதீஸில் சொல்லப்படாத மற்ற தானியங்களுக்கும் பொருட்களுக்கும் பொருந்தக்கூடியதாகும்.

எந்த செல்வமானாலும் அதன் மூலம் வட்டி வாங்கக்கூடாது என்று அல்லாஹ் குர்ஆனில் தெளிவாகக் கூறுகிறான்.

நீங்கள் திருந்திக் கொண்டால் உங்கள் செல்வங்களில் மூலதனம் உங்களுக்கு உரியது. நீங்களும் அநீதி இழைக்கக் கூடாது. உங்களுக்கும் அநீதி இழைக்கப்படாது.

அல்குர்ஆன் (2 : 279)

இந்த வசனத்தில் உங்கள் செல்வங்களில் மூலதனம் உரியது என்று அல்லாஹ் கூறுகிறான். எந்த செல்வமானாலும் அதன் மூலம் வட்டி சம்பாதிக்க முடியும். ஆனால் சம்பாதிக்கக் கூடாது என்று அல்லாஹ் தெளிவுபடுத்துகிறான்.

வட்டி என்பது மோசடியும் பொருளாதாரச் சுரண்டலுமாகும். இந்த மோசடியை அனைத்து பொருட்களிலும் செய்ய முடியும். பொருள் வேறுபடுவதால் மோசடி இல்லை என்று கூறுவது அறிவீனம்.

எனவே செல்வம் என்ற வட்டத்துக்குள் வரும் எந்தப் பொருளானாலும் அதில் வட்டி வரும். முஸ்லிம்கள் இதை கண்டிப்பாக வாங்கக் கூடாது.

**திருந்துவோர் திருப்பிக்கொடுக்க வேண்டியதில்லை**

ஒருவர் வட்டியிலிருந்து விடுபட முடிவெடுத்துவிட்டால் இதற்கு முன்பு அவர் வாங்கிய வட்டிப் பணத்தை மக்களிடம் திருப்பிக்கொடுக்க வேண்டிய அவசியமில்லை. அந்தப் பணத்தை அவர் தவறான அடிப்படையில் சம்பாதித்து இருந்தாலும் அதை அவரே வைத்துக்கொள்ளலாம் என்ற அனுமதியை அல்லாஹ் வழங்கியுள்ளான்.

அல்லாஹ் வியாபாரத்தை அனுமதித்து வட்டியைத் தடை செய்து விட்டான். தமது இறைவனிடமிருந்து தமக்கு அறிவுரை வந்த பின் (வட்டியிலிருந்து) விலகிக் கொள்பவருக்கு முன் சென்றது உரியது. அவரைப் பற்றிய முடிவு அல்லாஹ்விடம் உள்ளது. மீண்டும் செய்வோர் நரகவாசிகள். அதில் நிரந்தரமாக இருப்பார்கள்.

அல்குர்ஆன் (2:275)

ஆனால் இங்கே ஒரு விசயத்தை கவனிக்க வேண்டும். இவ்வாறு திருந்தியவரைப் பற்றிய முடிவு அல்லாஹ்விடம் உள்ளது என்று அல்லாஹ் கூறுகிறான்.

எனவே நாம் செய்த பாவத்துக்கு அல்லாஹ்விடம் மன்னிப்புக் கோருவது அவசியம். வட்டிப் பாவத்தில் ஈடுபட்டதால் இதற்காக மனம் வருந்தி இனி ஒருக்காலும் இந்த பாவத்தில் ஈடுபடமாட்டேன் என்ற உறுதியுடன் இறைவனிடம் பாவமன்னிப்பு கேட்க வேண்டும்.

## வர வேண்டிய வட்டியை வாங்கலாகாது

வட்டி வாங்கிக் கொண்டிருந்தவர் அதிலிருந்து விடுபட முடிவு செய்துவிட்டால் இவர் கடனாக கொடுத்த அசல் தொகையை மட்டும் திரும்ப வாங்கிக்கொள்ளலாம்.

கடன் வாங்கியோர் இவருக்கு வட்டிப் பணத்தை கொடுக்க வேண்டிய நிலையில் இருந்தாலும் அந்தப் பணத்தை வாங்கக்கூடாது. அசலை மட்டுமே வாங்கிக்கொள்ள வேண்டும்.

நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்வை அஞ்சுங்கள்! நீங்கள் நம்பிக்கை கொண்டிருந்தால் வர வேண்டிய வட்டியை விட்டு விடுங்கள்!

அல்குர்ஆன் (2 : 278)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வட்டியை ஹராம் என்று அறிவித்தவுடன் அப்பாஸ் (ரலி) அவர்களுக்கு வர வேண்டியிருந்த வட்டியை தள்ளுபடி செய்தார்கள்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

அறியாமைக் காலத்தில் இருந்த வட்டியும் என் பாதங்களுக்குக் கீழே புதைக்கப்படுகிறது. (அவற்றையும் நான் தள்ளுபடி செய்கிறேன்.) நம்மவர் கொடுத்திருந்த வட்டிகளில் முதற்கட்டமாக (என் பெரிய தந்தை) அப்பாஸ் பின் அப்தில் முத்தலிபிற்கு வரவேண்டிய வட்டியை நான் தள்ளுபடி செய்கிறேன். அதில் (அசலைத் தவிர) கூடுதலான தொகை அனைத்தும் தள்ளுபடி செய்யப்படுகிறது.

நூல் : முஸ்லிம் (2334)

எனவே இனி வட்டி ஏதும் வர வேண்டியது இருந்தால் அதை வாங்கக்கூடாது.

**வட்டி இல்லா கடன்**

அல்லாஹ் சிலருக்கு அவர்களின் தேவையை விட அதிகமாக வாரி வழங்குகிறான். அவர்கள் இந்த செல்வத்தை பிறருக்கு கொடுத்து உதவ வேண்டும் என்பதற்காக கணக்கு வழக்கில்லாமல் இறைவன் அள்ளித்தருகின்றான்.

எனவே சிரமப்படுபவர்கள் கடன் கேட்டு வந்தால் வசிதியுள்ளவர்கள் வட்டி வாங்காமல் அவர்களுக்கு கடன்கொடுத்து உதவ வேண்டும். கடன் வாங்கியவர்கள் குறிப்பிட்ட தவணைக்குள் திருப்பிச் செலுத்த முடியாமல் அவகாசம் கேட்டால் அவகாசம் அளிக்க வேண்டும். விரும்பினால் அந்தக் கடனை தள்ளுபடியும் செய்யலாம்.

செல்வந்தர்கள் இவ்வாறு தாராள மனதுடன் நடந்துகொண்டால் இறைவன் அவர்களிடத்தில் தாராளமாக நடந்துகொள்கிறான்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

உங்களுக்கு முன்னர் வாழ்ந்த ஒரு மனிதரின் உயிரை வானவர்கள் கைப்பற்றி, அவரிடம் நீர் ஏதேனும் நல்லது செய்திருக்கிறீரா? எனக் கேட்டனர். அதற்கு அம்மனிதர், வசதியானவருக்கு அவகாசம் வழங்கியும், சிரமப்படுபவரின் கடனைத் தள்ளுபடி செய்யுமாறும் நான் எனது ஊழியர்களுக்குக் கட்டளையிட்டிருந்தேன்! என்று கூறினார். உடனே, அவரது தவறுகளைக் கண்டுகொள்ளாமல் விட்டுவிடுங்கள்! என்று அல்லாஹ் வானவர்களுக்குக் கட்டளையிட்டான்!

இதை ஹுதைஃபா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நூல் : புகாரி (2077)

ஹுதைஃபா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

அல்லாஹ்வின் அடியார்களில் ஒருவர் (இறந்த பின்) அல்லாஹ்விடம் கொண்டு வரப்பட்டார். அவரிடம் அல்லாஹ், "உலகத்தில் நீ என்ன நற்செயல் புரிந்தாய்?" என்று கேட்டான். (அல்லாஹ்விடம் அவர்கள் எந்தச் செய்தியையும் மறைக்க முடியாது.) அதற்கு அந்த அடியார், "இறைவா! உன் செல்வத்தை எனக்கு நீ வழங்கினாய். அதை வைத்து நான் மக்களிடம் கொடுக்கல் வாங்கல் செய்துவந்தேன். அப்போது பெருந்தன்மையுடன் நடந்துகொள்வதே எனது இயல்பாக இருந்தது. வசதியுடையவரிடம் மென்மையாக நடந்துகொள்வேன்; சிரமப்படுபவருக்கு அவகாசம் அளிப்பேன்" என்று சொன்னார்.

அதற்கு அல்லாஹ், "இ(வ்வாறு பெருந்தன்மையுடன் நடப்ப)தற்கு உன்னைவிட நானே மிகவும் தகுதியுடையவன். (எனவே,) என் அடியானின் தவறுகளைத் தள்ளுபடி செய்யுங்கள்" என்று (வானவர்களிடம்) கூறினான்.

முஸ்லிம் (3181)

ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (தமது வீட்டின்) வாசலருகே சச்சரவிட்டுக்கொள்ளும் (இருவரின்) சப்தத்தைக் கேட்டார்கள். அவ்விருவரின் குரல்கள் உயர்ந்தன. ஒருவர் மற்றவரிடம் ஏதோ ஒரு (கடன்) விஷயத்தில் தள்ளுபடி செய்யுமாறும் மென்மையாக நடந்துகொள்ளுமாறும் கேட்டுக்கொண்டிருந்தார். அதற்கு மற்றவர், "அல்லாஹ்வின் மீதாணையாக! நான் (அவ்வாறு) செய்யமாட்டேன்" என்று கூறிக் கொண்டிருந்தார். அவர்களிடம் அல்லாஹ் வின் தூதர் (ஸல்) அவர்கள் புறப்பட்டு வந்து, "நல்லறத்தைச் செய்யமாட்டேன் என அல்லாஹ்வின் மீது ஆணையிட்டுச் சொன்னவர் எங்கே?" என்று கேட்டார்கள். அந்த மனிதர், "நான்தான் அல்லாஹ்வின் தூதரே! (நான் என் சத்தியத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்கிறேன்;) அவர் விரும்பியது எதுவானாலும் (அது) அவருக்குக் கிடைக்கும்" என்று கூறினார்.

முஸ்லிம் (3171)

**நட்டம் வராத வகையில் கடன் கொடுக்கலாம்**

எந்தக் கரன்ஸியின் அடிப்படையில் கடன் கொடுக்கின்றோமோ அதே கரன்ஸியின் அடிப்படையில் தான் திருப்பி வாங்க வேண்டும். அதிகப்படுத்தி கேட்கக் கூடாது.

நாணயம் மாற்றும் போது தங்கத்திற்குத் தங்கத்தையோ, வெள்ளிக்கு வெள்ளியையோ மாற்றினால் சரிக்குச் சரியாக இருக்க வேண்டும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியதை நான் செவியுற்றுள்ளேன்.

அறிவிப்பவர்: அபூசயீத் (ரலி)

நூல்: புகாரி 2176

இந்த ஹதீஸின் அடிப்படையில் 4000ரியால் கடன் கொடுத்திருந்தால் அதே 4000ரியால் மட்டுமே வாங்க வேண்டும். அதிகமாகக் கேட்டு வாங்கினால் அது வட்டி என்பதில் சந்தேகமில்லை.

எனவே கடன் கொடுக்கும் போதே, இன்ன கரன்ஸியின் அடிப்படையில் கடன் தருகிறேன்; அதே கரன்ஸி மதிப்பின் அடிப்படையில் தான் திருப்பித் தர வேண்டும் என்று ஒப்பந்தம் போட்டுக் கடன் கொடுக்கலாம்.

உதாரணமாக 4000ரியால்கள் கடன் கொடுக்கும் போது, அப்போதைய இந்திய ரூபாயின் மதிப்பில் கணக்குப் போட்டு 44,000ரூபாய் தர வேண்டும் என்று ஒப்பந்தம் செய்து கடன் கொடுக்கிறீர்கள்; கடன் வாங்கியவர் திருப்பித் தரும் போது இந்திய ரூபாயின் மதிப்பு உயர்ந்து விட்டது. அதாவது 44,000ரூபாய்க்கு 4200ரியால்கள் வருகின்றது என்றால், ஏற்கனவே செய்து கொண்ட ஒப்பந்தத்தின் படி 200ரியால்கள் அதிகமாக வாங்கிக் கொள்ளலாம்.

அது போல் 44000 ரூபாய்க்கு 3800 ரியால் என்று மதிப்பு குறைந்து விட்டால் 3800 தான் வாங்க வேண்டும். 4000 ரியால் கொடுத்ததால் 4000 ரியால் தான் தர வேண்டும் என்று கேட்கக் கூடாது. ஏனெனில் நீங்கள் ரியால் அடிப்படையில் கடன் கொடுக்கவில்லை. இந்திய ரூபாயின் அடிப்படையில் தான் கடன் கொடுத்தீர்கள்.

நம்பிக்கை கொண்டோரே! ஒப்பந்தங்களை நிறைவேற்றுங்கள்!

அல்குர்ஆன் 5:1

ஒப்பந்தத்தை நிறைவேற்ற வேண்டும் என்று வலியுறுத்தி ஏராளமான வசனங்கள், ஹதீஸ்கள் உள்ளன. எனவே கடன் கொடுக்கும் போது எந்தக் கரன்ஸியின் அடிப்படையில் திருப்பித் தர வேண்டும் என்று ஒப்பந்தம் செய்து கொடுக்கிறோமோ அதே கரன்ஸியின் மதிப்பின் அடிப்படையில் வாங்க வேண்டும். இவ்வாறு செய்யும் போது, இந்திய ரூபாயின் மதிப்பு குறைந்தும் போகலாம். 4000ரியால்கள் கொடுத்ததற்கு, 3800ரியால் மட்டுமே திருப்பிக் கிடைக்கும் நிலை ஏற்படலாம்.

வெளிநாட்டு கரன்ஸிகளின் மதிப்பு மட்டுமல்ல! இந்தியாவிலேயே பண மதிப்பு நாளுக்கு நாள் மாறிக் கொண்டு தான் வருகின்றது. ஒரு நாட்டின் பண மதிப்பு குறைவதற்கும், உயர்வதற்கும் அந்த நாட்டை ஆள்பவர்களின் நிர்வாகத் திறனே காரணம். தவறான பொருளாதாரக் கொள்கைகளால் பண மதிப்பு குறைந்து போகின்றது.

ஆட்சியாளர்களின் நிர்வாகக் குளறுபடிகளால் ஏற்படும் இந்த மாற்றங்களுக்கு, கடன் கொடுத்தவர்கள் நட்டமடைந்து வருகின்றனர். இது எந்த விதத்திலும் நியாயமில்லை.

ஒரு பவுன் நகை 12 ஆயிரமாக இருக்கும் போது நாம் ஐந்து பவுன் நகை வாங்குவதற்காக 60 ஆயிரம் ரூபாய் சேமித்து வைத்திருக்கிறோம். அவசரத்துக்காக

ஒருவர் கடன் கேட்கும் போது 60 ஆயிரத்தைக் கொடுக்கிறோம். அவர் ஆறு மாதம் கழித்து திருப்பித் தரும் போது ஒரு பவுன் விலை 15 ஆயிரமாகி விடுகிறது.

இப்போது 60 ஆயிரம் ரூபாயில் ஐந்து பவுன் வாங்க முடியாது. நான்கு பவுன் தான் வாங்க முடியும். கடன் கொடுக்காமல் அப்போதே நகையாக வாங்கி இருந்தால் நாம் ஐந்து பவுன் வாங்கி இருக்க முடியும். கடன் கொடுத்ததால் நமக்கு ஏற்பட்ட நட்டம் ஒரு பவுன் அதாவது 15 ஆயிரம் ரூபாய். இதன் காரணமாகத் தான் கடன் கொடுப்பதற்கு பலரும் தயக்கம் காட்டுகின்றனர்.

நாம் கடன் கொடுக்கும் போது நமக்கு நட்டம் வராத வகையில் ஒப்பந்தம் செய்து கொள்ளலாம். ஐந்து பவுன் தங்கத்தின் மதிப்புக்கு உரிய தொகையை உனக்குக் கடனாகத் தருகிறேன். நீ திருப்பித் தரும் போது ஐந்து பவுன் தங்கத்துக்கு உரிய தொகை என்னவோ அதைத் தான் தர வேண்டும் என்று பேசி கடன் கொடுத்தால் அதில் தவறு இல்லை.

**கடன் வாங்குவதை தவிர்க்க வேண்டும்**

இன்றைக்கு பலர் கடன் வாங்குவதின் விபரீதத்தை உணராமல் எந்தத் தேவையுமின்றி சர்வ சாதாரணமாக கடன் வாங்கிக்கொண்டிருக்கின்றனர். இந்தப் பழக்கம் நாளடைவில் அவர்களை வட்டிக்கு கடன் வாங்கும் நிலைக்கு கொண்டு சென்று விடுகின்றது.

அவசியமான தேவைகளுக்கு கடன் வாங்குவது மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டுள்ளது. ஆனால் தேவையில்லாமல் கடன் வாங்குவது நல்ல செயல் இல்லை.

அல்லாஹ்வின் பாதையில் உயிர் நீத்த தியாகியானாலும் கடனுடன் மரணித்தால் அல்லாஹ் அவரை மன்னிப்பதில்லை. எனவே முதலில் கடனை நிறைவேற்றும் கடமை உள்ளது.

“அல்லாஹ்வின் பாதையில் உயிர் தியாகம் செய்தவர்களுக்கு எல்லாப் பாவங்களும் மன்னிக்கப்படுகின்றன. கடனைத் தவிர!” என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ரு பின் அல்ஆஸ் (ரலி),

நூல்: முஸ்லிம் 3832

அபூகத்தாதா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (ஒரு முறை) எங்களிடையே நின்று, “அல்லாஹ்வின் பாதையில் அறப்போர் புரிவதும் அல்லாஹ்வின் மீது நம்பிக்கை கொள்வதும் நற்செயல்களிலேயே மிகவும் சிறந்ததாகும்” என்று கூறினார்கள். அப்போது ஒரு மனிதர் எழுந்து, “அல்லாஹ்வின் தூதரே! நான் அல்லாஹ்வின் பாதையில் (அறப்போரில்) கொல்லப்பட்டால், என் பாவங்கள் அனைத்தும் மன்னிக்கப்படுமா, கூறுங்கள்?” என்று கேட்டார்.

அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “ஆம், நீங்கள் அல்லாஹ்வின் பாதையில் பொறுமையுடனும் (இறைவனுக்காக எனும்) தூய எண்ணத்துடனும் புறமுதுகிட்டு ஓடாமல் முன்னோக்கிச் சென்று கொல்லப்பட்டால், (உங்கள் அனைத்துப் பாவங்களும் மன்னிக்கப்படும்)” என்று பதிலளித்தார்கள்.

பிறகு (சிறிது நேரம் கழித்து) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “எப்படிக் கேட்டீர்கள் (மீண்டும் சொல்லுங்கள்)?” என்று கேட்டார்கள். அந்த மனிதர், “நான் அல்லாஹ்வின் பாதையில் (அறப்போரில்) கொல்லப்பட்டால், என் பாவங்கள் அனைத்தும் மன்னிக்கப்படுமா, கூறுங்கள்?” என்று கேட்டார்.

மீண்டும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், “ஆம், நீங்கள் பொறுமையுடனும் (இறைவனுக்காக எனும்) தூய எண்ணத்துடனும் புறமுதுகிட்டு ஓடாமல் முன்னோக்கிச் செல்லும்போது (கொல்லப்பட்டுவிட்டால் உங்கள் பாவங்கள்

அனைத்தும் மன்னிக்கப்பட்டுவிடுகின்றன.) ஆனால், கடனைத் தவிர! ஏனெனில், (வானவர்) ஜிப்ரீல் (அலை) அவர்கள் என்னிடம் (இப்போதுதான்) இவ்வாறு கூறினார்” என்றார்கள்.

நூல் : முஸ்லிம் (3830)

நபி (ஸல்) அவர்கள் கடனில் விழுந்துவிடக் கூடாது என்று அல்லாஹ்விடம் பாதுகாப்புத் தேடியுள்ளார்கள். கடன் வாங்குவது ஆபத்தான செயல் என்று கூறியுள்ளார்கள்.

நபி (ஸல்) அவர்களின் துணைவியார் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தொழுகையில் பிரார்த்தனை செய்யும்போது, ‘அல்லாஹும்ம இன்னீ அஊது பி(க்)க மின் அதாபில் கப்ரி, வஅஊது பி(க்)க மின் ஃபித்னத்தில் மஸீஹித் தஜ்ஜாலி, வஅஊது பி(க்)க மின் ஃபித்னத்தில் மஹ்யா, வஃபித்னத்தில் மமாத்தி. அல்லாஹும்ம! இன்னீ அஊது பி(க்)க மினல் மஃஸமி வல்மஃக்ரம்’

பொருள் : இறைவா! அடக்கக்குழியின் வேதனையிலிருந்து உன்னிடம் நான் பாதுகாப்புத் தேடுகிறேன். மஸீஹுத் தஜ்ஜாலின் குழப்பத்திலிருந்து உன்னிடம் பாதூகப்புத்தேடுகிறேன். வாழ்வின் சோதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புத்தேடுகிறேன். இறைவா! பாவத்திலிருந்தும் கடனிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புத் தேடுகிறேன்ன என்று கூறுவார்கள்.

(இதைச் செவியுற்ற) ஒருவர் நபி (ஸல்) அவர்களிடம், “தாங்கள் கடன் படுவதிலிருந்து அதிகமாகப் பாதுகாப்புத் தேட என்ன காரணம்?” என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்) அவர்கள், “மனிதன் கடன் படும்போது பொய் பேசுகிறான்; வாக்குறுதி அளித்துவிட்டு (அதற்கு) மாறு செய்கிறான்” என்று பதிலளித்தார்கள்.

நூல் : புகாரி (832)

கடன் வாங்கிவிட்டு அதை நிறைவேற்றாமல் மரணித்தவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் ஜனாஸா தொழுகை நடத்த மறுத்துவிட்டார்கள்.

சலமா பின் அக்வஃ (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

இறுதித்தொழுகை நடத்துவதற்காக ஒரு ஜனாஸா கொண்டுவரப்பட்டது. இவர் கடனாளியா? என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டபோது, நபித் தோழர்கள் இல்லை என்றனர். அவருக்கு நபி (ஸல்) அவர்கள் தொழுகை நடத்தினார்கள். பிறகு மற்றொரு ஜனாஸா கொண்டு வரப்பட்டபோது, இவர் கடனாளியா? என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். நபித்தோழர்கள் ஆம்! என்றனர். நபி (ஸல்) அவர்கள் அப்படியென்றால் உங்கள் தோழருக்கு நீங்களே தொழுகை நடத்துங்கள்! என்றார்கள். அப்போது அபூகத்தாதா (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதரே! இவரது கடனுக்கு நான் பொறுப்பு என்று கூறியதும், அவருக்கு நபி (ஸல்) அவர்கள் தொழுகை நடத்தினார்கள்.

நூல் : புகாரி (2295)

எனவே இயன்ற வரை கடன் வாங்குவதை தவிர்க்க வேண்டும். தேவைக்காக கடன் வாங்கினால் அதை திருப்பிக்கொடுப்பதற்கு சூழ்நிலை அமையும் போது தாமதிக்காமல் உடனே கடனை அடைத்துவிட வேண்டும். ஏனென்றால் கடனை வாங்கிவிட்டு நிறைவேற்றாமல் இழுத்தடிப்பதும் பாவமான செயலாகும்.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

செல்வந்தன் (வாங்கிய கடனைத் திருப்பிச் செலுத்தாமல் தவணை கேட்டு) இழுத்தடிப்பது அநியாயமாகும்! உங்களில் ஒருவரது கடன் ஒரு செல்வந்தர் மீது மாற்றப்பட்டால் அவர் ஒப்புக் கொள்ளட்டும்!

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நூல் : புகாரி (2288)

## அழகிய முறையில் திருப்பிச் செலுத்துதல்

ஒரு மனிதனிடம் நாம் கடன் வாங்கும் போது, எவ்வளவு வாங்குகிறோமோ அதை விட அதிகமாக நல்ல முறையில் திருப்பிக் கொடுக்க வேண்டும் என்று இஸ்லாம் ஆர்வமூட்டுகின்றது.

ஆனால் இன்றைக்குக் கடன் வாங்கும் வரை வளைந்து குனிந்து பணிவுடன் வாங்கி விடுகிறான். அதைத் திருப்பிக் கொடுக்கும் போது கடன் கொடுத்தவரை அலையாய் அலைக்கழிப்பதையும் இழுத்தடிப்பதையும் நாம் பார்க்கிறோம். இதை இஸ்லாம் வன்மையாகக் கண்டிக்கிறது. திருப்பிக் கொடுக்கும் போது கொஞ்சம் கூடுதலாகவே கொடுங்கள் என்று மார்க்கம் கூறுகின்றது.

கடன் கொடுத்தவர் எதையும் கூடுதலாகக் கேட்காமல், கடன் பெற்றவர் தாமாக விரும்பி கடனை அடைக்கும் போது எதையேனும் அதிகப்படுத்திக் கொடுத்தால் அதில் தவறில்லை.

உதாரணமாக ஒருவன் பத்தாயிரம் ரூபாய் கடன் வாங்கி விட்டு, கொடுக்கும் போது ஆயிரமோ, இரண்டாயிரமோ கூடுதலாக, தானாக முன்வந்து கொடுத்தால் அது தவறு கிடையாது. இதை பின்வரும் ஹதீஸ் தெளிவுபடுத்துகிறது

ஒரு மனிதர் அல்லாஹ்வின் தூதரிடம், அவர்களுக்குத் தான் கொடுத்த (ஒட்டகத்)தைத் திருப்பித் தரும்படி கேட்டார். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் அந்த மனிதர் கடுமையாகப் பேசினார். ஆகவே, நபித் தோழர்கள் அவரைத் தண்டிக்க விரும்பினார்கள். அப்போது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தம் தோழர்களை நோக்கி, (அவரைத் தண்டிக்க வேண்டாம்;) விட்டு விடுங்கள். ஏனெனில், ஒருவர் தனக்குக் கடன் தர வேண்டியவரிடம் கடுமையாகப் பேச உரிமையுண்டு. அவருக்காக ஓர் ஒட்டகத்தை வாங்கி அவரிடம் கொடுத்து விடுங்கள் என்று கூறினார்கள். நபித் தோழர்கள், அவருக்குத் தர வேண்டிய ஒட்டகத்தின் வயதை விட அதிக வயதை உடைய ஒட்டகம் தான் எங்களிடம் இருக்கின்றது

என்று கூறினார்கள். அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், அதையே வாங்கி அவருக்குக் கொடுத்து விடுங்கள். ஏனெனில், உங்களில் எவர் நல்ல முறையில் கடனைத் திருப்பிச் செலுத்துகின்றாரோ அவரே உங்களீல் சிறந்தவர் என்று கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி)

நூல்: புகாரி 2305 2306 2390 2392 2393 2606 2609

நபி (ஸல்) அவர்கள் கடன் வாங்கினால் அதை விட அதிகமானதையே கொடுப்பார்கள். இதைப் பின்வரும் ஹதீசும் தெளிவுபடுத்துகின்றது.

ஜாபிர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்:

நான் நபி (ஸல்) அவர்களிடம் பள்ளிவாசலில் சென்றேன்; எனக்கு (என்னிடம் வாங்கிய ஒட்டகத்தின் விலையைச்) செலுத்தி எனக்கு அதிகமாகவும் தந்தார்கள்.

நூல்: புகாரி 2603

கடன் வாங்கியவர் தாமாக விரும்பி, வாங்கிய கடனை விட அதிகமாகத் தந்தால் அதை ஏற்றுக் கொள்வதில் தவறில்லை என்பதை இந்த ஹதீஸிலிருந்து விளங்கலாம்.

கடன் கேட்கும் போது கூடுதலாக தருவேன் என்று வாக்குறுதி கொடுப்பதும் இதை நிபந்தனையாக பேசுவதும் வட்டியாகும். இவ்வளவு கூடுதலாகத் தர வேண்டும் என்ற நிபந்தனையின் அடிப்படையில் கடன் கொடுத்தால் அது வட்டியாகி விடும். அதே போன்று திருப்பிக் கொடுப்பவர் இன்ன தொகைக்கு இவ்வளவு என்று நிர்ணயித்து, கூடுதலாகக் கொடுத்தால் அதுவும் கூடாது.

கடனை முழுவதுமாக ஒப்படைக்கும் நேரத்தில் கடன் வாங்கியவர் தானாக விரும்பிக் கொடுப்பது வட்டியாகாது. மாறாக இது மார்க்கத்தில் சிறப்பித்து சொல்லப்பட்ட விசயமாகும்.

**அன்பளிப்பு என்ற பெயரில் வட்டி**

கடன் வாங்கியவர் அதை திருப்பிச் செலுத்தும் போது விரும்பி கூடுதலாகக் கொடுப்பது தவறில்லை. ஆனால் கடனை அடைப்பதற்கு முன் கடன் கொடுத்தவருக்கு அவர் கடன் கொடுத்ததற்காக அன்பளிப்பு வழங்குவது வட்டியாகும்.

இவ்வாறு அன்பளிப்பு கொடுத்தால் கடன் கொடுத்தவரை திருப்திபடுத்தி மேலும் அவகாசம் கேட்கலாம். சீக்கிரமாக பணம் கேட்கமாட்டார் என்ற நோக்கத்திற்காக இந்த அன்பளிப்பு கொடுக்கப்படுகின்றது. இது வாங்கிய கடனுக்காக கொடுக்கப்படுவதால் இதுவும் வட்டியாகும்.

அபூ புர்தா ஆமிர் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள் :

நான் மதீனாவுக்கு வந்து அப்துல்லாஹ் பின் சலாம் (ரலி) அவர்களைச் சந்தித்தேன். அவர்கள் (என்னிடம்), “நீங்கள் (என்னுடன்) வர மாட்டீர்களா? உங்களுக்கு நான் மாவையும் பேரீச்சம் பழத்தையும் உண்ணத் தருவேன். நீங்கள் (நபி (ஸல்) அவர்கள் வருகை தந்த என்) வீட்டிற்கு வந்ததாகவும் இருக்குமே” என்று கேட்டார்கள். பிறகு, “நீங்கள் வட்டி மலிந்துள்ள (இராக்) நாட்டில் வசிக்கின்றீர்கள். உங்களுக்கு ஒருவர் கடனைத் திருப்பிச் செலுத்த வேண்டியிருந்து, அவர் ஒரு வைக்கோல் போரையோ, வாற்கோதுமை மூட்டையையோ, கால்நடைத் தீவன மூட்டையையோ அன்பளிப்பாகக் கொடுத்தாலும் அதுவும் வட்டியாகும்” என்று சொன்னார்கள்.

நூல் : புகாரி (3814)

### நிர்பந்தமான நிலையில் வட்டி

பொதுவாக வட்டி வாங்குவதும் வட்டி கொடுப்பதும் மார்க்கத்தில் தடைசெய்யப்பட்டுள்ளது. ஆனால் நிர்பந்தமான நேரங்களில் இது போன்ற ஹராமான விசயங்கள் அனுமதிக்கப்பட்டதாகிவிடும்.

ஒருவருடைய உயிரை காப்பாற்ற பணம் தேவைப்படுகின்றது. உதவி செய்யவோ கடன் கொடுக்கவோ யாரும் முன்வரவில்லை. வட்டிக்கு கடன் கொடுக்கத் தயாராக உள்ளனர். இந்நிலையில் உயிரைக் காப்பாற்ற இதைத் தவிர வேறு வழியில்லை.

இது மாதிரியான நிர்பந்தமான நேரங்களில் வட்டிக்கு கடன் வாங்கினால் அல்லாஹ் குற்றம்பிடிக்கமாட்டான். நிர்பந்தமான நிலை ஏற்படும் போது மார்க்கத்தின் சட்டதிட்டங்கள் குறுக்கே நிற்காது. நமது உயிரை காப்பதற்குரிய வழி என்னவோ அதை கையாள வேண்டும் என்றே மார்க்கம் கூறுகின்றது.

இணைவைப்பது தான் பாவங்களில் மிகப்பெரிய பாவமாகும். நிர்பந்தத்தில் ஒருவர் இணைவைப்பு வார்த்தைகளை கூறினால் அல்லாஹ் அதை கூட மன்னிக்கின்றான்.

அல்லாஹ்வை நம்பிய பின் அவனை மறுப்போர் மீதும், மறுப்பிற்கு உள்ளத்தில் தாராளமாக இடமளிப்போர் மீதும் அல்லாஹ்வின் கோபமும், கடும் வேதனையும் உண்டு. உள்ளத்தில் நம்பிக்கை வலுப்பெற்ற நிலையில் நிர்பந்திக்கப் பட்டவர் தவிர.

(அல்குர்ஆன் 16:106)

இறை நிராகரிப்பு என்பது தான் அல்லாஹ்விடத்தில் மன்னிக்க முடியாத பாவமாகும். ஆனால் அதற்கே நிர்ப்பந்தம் ஏற்பட்டால் அல்லாஹ் இந்த வசனத்தில் விதி விலக்கு வழங்குகின்றான்.

பன்றி இறைச்சி மார்க்கத்தில் தடை செய்யப்பட்ட உணவு. அதையும் நெருக்கடி, நிர்ப்பந்தத்தின் போது சாப்பிட்டால் அல்லாஹ் மன்னித்து விடுகின்றான் என்பதைக் கீழ்க்கண்ட வசனம் விளக்குகின்றது.

தாமாகச் செத்தவை, இரத்தம், பன்றியின் இறைச்சி, அல்லாஹ் அல்லாதோருக்காக அறுக்கப் பட்டவை ஆகியவற்றையே அவன் உங்களுக்குத் தடை செய்துள்ளான். வரம்பு மீறாமலும், வலியச் செல்லாமலும் நிர்பந்திக்கப் படுவோர் மீது எந்தக் குற்றமும் இல்லை. அல்லாஹ் மன்னிப்பவன்; நிகரற்ற அன்புடையோன்.

(அல்குர்ஆன் 2:173)

நிர்பந்தமான நிலையில் தடை செய்யப்பட்டவை அனுமதிக்கப்படும் என்பது உண்மையே. அது நிர்ப்பந்தம் தானா என்பதை அவரவர் மனசாட்சியிடம் கேட்கட்டும். இது நிர்பந்தம் தான் என்று அவருக்குத் தோன்றினால் அவர் அவ்வாறு செய்வதை யாரும் தடுக்க முடியாது.

ஆனால் உண்மையில் எந்த நிர்பந்தமும் இல்லாமல் வாயளவில் நிர்பந்தம் என்று கூறி வட்டிக்கு கடன் வாங்கினால் உலகத்தில் மனிதர்களின் விமர்சனத்திலிருந்து தப்பித்தாலும் அல்லாஹ்விடமிருந்து தப்பிக்க இயலாது.

மருத்துவம் செய்வதை நிர்பந்தமான நிலை என்று கூறலாம். ஆனால் ஓட்டு வீட்டை மாடி வீடாக மாற்றுவது ஒரு வீட்டை இரண்டு வீடாக கட்டுவது சந்ததிகளுக்கு இடம் வாங்கிப் போடுவது வாகனம் வாங்குவது இது போன்ற காரணங்களுக்காக வட்டி கட்டுபவர்கள் இருக்கின்றார்கள். இவையெல்லாம் கூடுதல் வசதியை பெருக்கிக்கொள்வதாகும். இதில் எந்த நிர்பந்தமும் இல்லை.

இது போன்ற காரணங்களுக்காக வட்டிக்கு கடன் வாங்கினால் நரகத்திற்கு செல்ல வேண்டிய நிலை ஏற்படும் என்பதை கவனத்தில் வைக்க வேண்டும்.

# தடைசெய்யப்பட்டவை

**நாணய மாற்றுதல்**

ஒரே வகையான நாணயத்திற்குள் நடக்கும் நாணயமாற்றுதல். வெவ்வேறு வகையான நாணயங்களுக்குள் நடக்கும் நாணயமாற்றுதல் என இது இரு வகைகளில் அமைந்துள்ளன.

ஒரே வகையான நாணயங்களுக்குள் நடக்கும் நாணயமாற்றுதலில் கூடுதல் குறைவு இல்லாமல் சமமான மதிப்பில் மாற்றிக் கொள்ள வேண்டும்.

பத்து கிராம் தங்கக் காசைக் கொடுத்து பத்து ஒரு கிராம் தங்கக் காசுகள் வாங்கலாம். விற்கலாம். பதினொரு அல்லது ஒன்பது காசுகள் என்ற வகையில் மாற்றினால் அது ஹராமாகும்.

அது போல் ஒரு நாட்டின் ரூபாய்க்கு சில்லரை மாற்றும் போது கூடுதல் குறைவு இருக்கக் கூடாது. நூறு ரூபாயை பத்து ரூபாயாக மாற்றும் போது பத்து நோட்டுகள் வாங்கலாம். பதினொன்று அல்லது ஒன்பது நோட்டுக்கள் வாங்க்க் கூடாது. அது போல் நோட்டுக்கு பதிலாக காயன்ஸ் வாங்கும் போது அதற்குச் சம்மான மதிப்பில் தான் வாங்க வேண்டும்.

நாணய வகை மாறுபட்டால் மார்கெட் நிலவரப்படி அல்லது நம் விருபப்ப்படி விலை நிர்ணயிக்கலாம். மார்க்கத்தில் இது குற்றமாகாது. டாலருக்கு ரியாலை அல்லது ரூபாய்க்கு திர்ஹமை மாற்றும் போது அல்லது தங்கத்துக்கு வெள்ளியை மாற்றும் போது எப்படி வேண்டுமானாலும் மாற்றிக் கொள்ளலாம்.

ஆனால் இது உடனுக்குடன் நடக்க வேண்டும். கடனாக இருக்க்க் கூடாது. இன்று ஒரு நூறு டாலர் கொடு நாளை ஐந்தாயிரம் த்ருகிறேன் என்று வியாபாரம் நட்ந்தால் கடனுக்காக நாம் அதிகம் பெற்றதாக ஆகி வட்டியில் சேர்ந்து விடும்.

ஒரே வகையான நாணயத்தை மாற்றும் போது நாம் அதிகமாக பெறுவதில்லை எனப்தால் கடனாக இருக்கலாம். இன்று ஆயிரம் ரூபாய் கொடுத்து நாளை அதற்கான சில்லறையைப் பெறலாம்.

இவை அனைத்துக்குமான ஆதாரங்கள் புகாரியில் இடம்பெற்ற கீழ்காணும் ஹதீஸ்களில் உள்ளன.

அபுல் மின்ஹால் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள் :

நான் நாணயமாற்று வியாபாரம் செய்து வந்தேன்; அது பற்றி(ய மார்க்கச் சட்டத்தை) ஸைத் பின் அர்கம் (ரலி), பராஉ பின் ஆஸிப் (ரலி) ஆகியோரிடம் கேட்டேன். அதற்கவர்கள், நாங்கள் நபி (ஸல்) அவர்களது காலத்தில் வியாபாரிகளாக இருந்தோம்: அவர்களிடம் நாணயமாற்று வியாபாரம் பற்றிக் கேட்டோம்; அதற்கு உடனுக்குடன் மாற்றிக் கொண்டால் அதில் தவறில்லை; தவணையுடன் இருந்தால் அது கூடாது என அவர்கள் பதிலளித்தார்கள் என்றார்கள்.

புகாரி (2060 & 2061)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

சரிக்குச் சரியாகவே தவிர, தங்கத்திற்குத் தங்கத்தை விற்காதீர்கள்! சரிக்குச் சரியாகவே தவிர, வெள்ளிக்கு வெள்ளியை விற்காதீர்கள்! தங்கத்திற்கு வெள்ளியையும், வெள்ளிக்குத் தங்கத்தையும் விரும்பியவாறு விற்றுக்கொள்ளுங்கள்.

இதை அபூபக்ரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

புகாரி (2175)

சாலிம் பின் அப்தில்லாஹ் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள் :

உமர் (ரலி) சம்பந்தப்பட்ட முந்தைய ஹதீஸ் போன்று அபூசயீத் (ரலி) அவர்கள், இப்னு உமர் (ரலி) அவர்களுக்கு ஒரு ஹதீஸை அறிவித்தார்கள். மற்றொரு சந்தர்ப்பத்தில் அபூசயீத் (ரலி) அவர்களை இப்னு உமர் (ரலி) அவர்கள் சந்தித்து, நீங்கள் நபி (ஸல்) அவர்கள் வழியாக என்ன அறிவித்தீர்கள்? என்று கேட்டார்கள். அதற்கு அபூசயீத் (ரலி), நாணயம் மாற்றும் போது தங்கத்திற்குத் தங்கத்தையோ வெள்ளிக்கு வெள்ளியையோ மாற்றினால் சரிக்குச் சரியாக இருக்க வேண்டும் என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதை நான் செவியுற்றுள்ளேன் என்றார்கள்.

புகாரி (2176)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

சரிக்குச் சரியாகவே தவிர, தங்கத்திற்குத் தங்கத்தை விற்காதீர்கள்! ஒன்றைவிட மற்றொன்றை அதிகமாக்கிவிடாதீர்கள்! சரிக்குச் சரியாகவே தவிர, வெள்ளிக்கு வெள்ளியை விற்காதீர்கள்! ஒன்றைவிட மற்றொன்றை அதிகமாக்காதீர்கள்! ஒன்று ரொக்கமாகவும் மற்றொன்று தவணையாகவும் இருக்கும் நிலையில் விற்காதீர்கள்!

இதை அபூசயீத் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

புகாரி (2177)

அபுல் மின்ஹால் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள் :

பராஉ பின் ஆஸிப் (ரலி), ஸைத் பின் அர்கம் (ரலி) ஆகியோரிடம் நாணயமாற்று பற்றிக் கேட்டேன். நபி (ஸல்) அவர்கள் கடனாக வெள்ளிக்குத் தங்கத்தை விற்பதைத் தடை செய்தார்கள் என அவ்விருவரும் பதிலளித்தனர். பிறகு இருவரும் மற்றவரைச் சுட்டிக்காட்டி, இவர் என்னைவிடச் சிறந்தவர் என்றனர்.

நூல் : புகாரி (2180 & 2181)

சுலைமான் பின் அபீ முஸ்லிம் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள் :

நான் அபுல் மின்ஹால் (ரஹ்) அவர்களுடன் உடனுக்குடன் செய்யும் நாணய மாற்று வியாபாரம் குறித்துக் கேட்டேன். அப்போது அவர்கள் பின்வருமாறு பதிலளித்தார்கள்: நானும் என் வியாபாரக் கூட்டாளி ஒருவரும் ஒரு பொருளை (சிறிது) உடனுக்குடனும் (சிறிது) தவணை முறையிலும் வாங்கினோம். அப்போது பராஉ பின் ஆஸிப் (ரலி) அவர்கள் எங்களிடம் வந்தார்கள். நாங்கள் அவர்களிடம் (இது குறித்துக்) கேட்டோம். அதற்கு அவர்கள், நானும் எனது கூட்டாளியான ஸைத் பின் அர்கம் (ரலி) அவர்களும் இந்த வியாபாரத்தைச் செய்து வந்தோம். நபி (ஸல்) அவர்களிடம் இது குறித்துக் கேட்டோம். அதற்கு அவர்கள், உடனுக்குடன் மாற்றிக் கொண்டதை எடுத்துக் கொள்ளுங்கள்; ஆனால், தவணை முறையில் மாற்றிக் கொண்டிருப்பீர்களாயின் அதை ரத்துச் செய்து விடுங்கள்' என்று பதிலளித்தார்கள் எனக் கூறினார்கள்.

புகாரி (2497 & 2498)

**ஒத்திக்க விடுவது வட்டியாகும்**

தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் ஒத்தி போகியம் பெந்தகம் குத்தகை என்ற பெயர்களில் ஒரு காரியம் நடைமுறையில் உள்ளது.

சிலர் வாடகையும் ஒத்தியைப் போன்றது என்ற தவறான கருத்தைக் கூறுகின்றனர். ஆனால் வீட்டை ஒத்திக்கு விடுவதற்கும் வாடகைக்கு விடுவதற்கும் வித்தியாசம் இருக்கின்றது.

வீட்டின் உரிமையாளர் ஒரு குறிப்பிட்ட தொகையை வாங்கிக் கொண்டு தன் வீட்டை ஒத்திக்கு விடுகின்றார். வீட்டின் உரிமையாளர் அப்பணத்தை தன்னிடம் திரும்ப ஒப்படைக்கும் வரை பணத்தைக் கொடுத்தவர் வீட்டை விட்டு வெளியேற மாட்டார். வாடகையும் கொடுக்க மாட்டார்.

ஒப்பந்த காலம் முடிவடைந்த உடன் வீட்டின் உரிமையாளர் வாங்கிய பணத்தை அப்படியே திருப்பிக் கொடுப்பார். இதன் பின் பணம் கொடுத்தவர் தன் பணத்தைத் திரும்பப் பெற்றுக் கொண்டு வீட்டைக் காலி செய்வார். இது ஒத்திக்கு விடுதல் என்று கூறப்படுகின்றது.

இது தெளிவான வட்டியாகும். பணத்தைக் கொடுத்துவிட்டு அப்பணம் தன்னிடம் திரும்பி வருகின்ற வரை பணம் வாங்கியவரிடமிருந்து ஒரு குறிப்பிட்ட தொகையை வாங்குவது வட்டியாகும்.

மாத வாடகை 1000 ரூபாய் பெறுமானமுள்ள வீட்டை ஒத்திக்குப் பெற்றவர் தான் பணம் கொடுத்ததற்காக வாடகை செலுத்தாமல் வசிக்கின்றார். இதன் மூலம் பணம் பெற்றவரிடமிருந்து மாதம் மாதம் 1000 ரூபாய் மறைமுகமாக பெறுகிறார்.

வீட்டின் உரிமையாளர் பணம் வாங்கிய காரணத்தாலே வாடகை வாங்காமல் வீட்டில் வசிப்பதற்கு அனுமதிக்கின்றார். அதாவது வாங்கிய பணத்துக்காக மாதம் மாதம் 1000 ரூபாய் செலுத்துகிறார். இது வட்டியாகும்.

ஆனால் வாடகை என்பது இது போன்றதல்ல. வீட்டைப் பயன்படுத்திவிட்டு அதற்குரிய கூலியாக குறிப்பிட்ட தொகையை வாடகைதாரர் வீட்டின் உரிமையாளரிடம் கொடுக்கின்றார். இங்கே வீட்டைப் பயன்படுத்தியதற்கான கூலி மட்டுமே வாங்கப்படுகின்றது. வாங்கப்பட்ட பணம் திருப்பித்தரப்பட மாட்டாது. இது வியாபாரமாகும்.

**ஒத்திக்கு விடுவது வியாபாரமல்ல**

ஒத்திக்கு விடுவது வியாபாரம் என்று பலர் நம்புகின்றனர். இது தவறாகும். வியாபாரம் என்பது, இலாபமும் நஷ்டமும் இணைந்தது. ஆனால் வட்டியில் இவ்வாறு இருப்பதில்லை. வட்டி எனும்போதும் அதில் உறுதியான இலாபம் கிடைக்கிறது.

மேலும் வியாபாரம் என்பதில் ஒரு தடவை ஒரு பொருளை வாங்கிவிட்டால் அல்லது விற்றுவிட்டால் அப்போது மட்டுமே ஒரு தடவை இலாபம் கிடைக்கும். தொடர்ந்து இலாபம் வந்து கொண்டிருக்காது. ஆனால் வட்டியில் தொடர்ந்து இலாபம் வந்து கொண்டிருக்கும். இந்த அடிப்படையை கவனத்தில் கொண்டு போகியம் என்பதைப் பார்ப்போம்.

ஒருவர் ஒரு இலட்சம் ரூபாயை கொடுக்கிறார். அதற்காக ஒரு வீட்டை இரண்டு வருடத்திற்கு பயன்படுத்திக் கொள்ள பணத்தை கொடுக்கிறார். மேலும் இரண்டு வருடம் கழித்த பின்னர் கொடுத்த ஒரு இலட்சத்தையும் திருப்பி வாங்கிக் கொள்கிறார்.

இந்நிலையில் போகியத்திற்கு வீட்டை பயன்படுத்துபவர், அந்த வீட்டை வாடகைக்கு எடுத்திருந்தால் அவர் சுமார் மாதம் இரண்டாயிரம் கொடுக்க வேண்டியிருக்கும். அப்படியானால் அவர் இரண்டு வருடத்திற்கு 48,000 ரூபாய் கொடுக்க வேண்டும். இந்த பணம், அவர் கொடுத்த ஒரு இலட்சத்தால் கிடைத்திருக்கிறது.

இதை இன்னொரு கோணத்தில் பாருங்கள் : போகியத்திற்கு வாங்கியவர் அந்த வீட்டை பயன்படுத்தாமல் மற்றவருக்கு வாடகைக்கு கொடுத்திருந்தால் இரண்டு வருடத்திற்கு 48,000 ரூபாய் வாங்கியிருப்பார். இந்த 48,000 ரூபாய் வட்டி இல்லையா? இதை வியாபாரத்துடன் ஒப்பிடமுடியுமா? இதில் இலாபமும் நஷ்டமும் இருக்கிறதா? இலாபம் மட்டும்தானே உள்ளது.

இது வட்டிதான் என்பதை புரிந்து கொள்ள இன்னொரு உதாரணத்தை கவனியுங்கள்: ஒருவர் இதே ஒரு இலட்சத்தை ஒருவருக்கு வழங்கி, மாதம் எனக்கு 2000 ரூபாய் வட்டி தர வேண்டும் என்று கூறுகிறார். அவரும் ஒத்துக் கொண்டு இரண்டு வருடம் 48000 ரூபாய் வட்டி கட்டுகிறார். பின்னர் ஒரு இலட்சத்தையும் திருப்பிச் செலுத்துகிறார். இதை கூடும் என்று சொல்வோமா?

**அடைமானத்தில் வட்டி வரக் கூடாது**

ஒருவருக்குப் ஐம்பதாயிரம் ரூபாய் பணம் தேவைப்படுகின்றது என்று வைத்துக் கொள்வோம். இவர் தன்னிடமுள்ள வீட்டை ஒருவரிடம் அடைமானமாகக் கொடுத்து, தனக்குத் தேவையான பணத்தைப் பெற்றுக் கொள்கின்றார். கடன் வாங்கியவருக்கு வசதி வரும் போது அந்தப் பணத்தைத் திருப்பிச் செலுத்தி விட்டு தனது வீட்டை வாங்கிக் கொள்கிறார். இது அடைமானமாகும்.

கொடுக்கின்ற பணத்திற்கு ஈடாக ஒரு பொருளை வாங்கி வைத்துக் கொள்வதற்கு மார்க்கத்தில் அனுமதி உள்ளது. ஆனால் பணம் கொடுத்தவர் அந்தப் பொருளை உபயோகப்படுத்தாமல் இருக்க வேண்டும்.

அந்தப் பொருளை அவர் உபயோகிக்க ஆரம்பித்து விட்டால் அது வட்டியாகி விடுகின்றது. அதாவது அந்த வீட்டை அவர் உபயோகிப்பதற்காகக் கொடுக்க வேண்டிய வாடகையை, தான் கொடுத்துள்ள பணத்திற்கு வட்டியாக எடுத்துக் கொள்கின்றார். ஒத்தி என்று கூறப்படுவது இது தான்.

ஒத்தி என்பது தெளிவான வட்டி தான் என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை. இதற்கு மார்க்கத்தில் அனுமதி இல்லை.

உயிருள்ள பிராணிகளை அடகு வைத்தால் மட்டுமே அவற்றைப் பயன்படுத்திக் கொள்ள அனுமதி உண்டு. அதுவும் அந்தப் பிராணியை வளர்ப்பதற்கு ஆகும் பராமரிப்புச் செலவுக்குப் பிரதியாக மட்டுமே பயன்படுத்த வேண்டும்.

“அடகு வைக்கப்பட்ட பிராணியை, அதற்காகும் (பராமரிப்புச்) செலவுக்குப் பிரதியாக (அடகு வாங்கியவர்) வாகனமாகப் பயன்படுத்திக் கொள்ளலாம். பால் தரும் பிராணி அடகு வைக்கப்பட்டிருப்பின் அதன் பாலை அருந்தலாம்” என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.

அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி)

நூல்: புகாரி 2511

இந்த ஹதீஸில், அடகு வைக்கப்பட்ட பிராணியை அதற்காகும் செலவுக்குப் பிரதியாக அதைப் பயன்படுத்தலாம் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள். கால்நடைகளைப் பொறுத்தவரை அவற்றை வளர்ப்பதற்கு ஒரு குறிப்பிட்ட தொகை செலவிட்டாக வேண்டும்.

அடைமானமாகப் பெற்றவர் இந்தச் செலவுகளை தனது சொந்தப் பணத்திலிருந்து செய்ய முடியாது. எனவே தான் அந்தச் செலவுக்குப் பிரதியாக அந்தப் பிராணிகளைப் பயன்படுத்த நபி (ஸல்) அவர்கள் அனுமதி அளிக்கின்றார்கள்.

இந்த அனுமதி இல்லாவிட்டால் யாரும் கால்நடைகளை அடைமானமாகப் பெற மாட்டார்கள். அப்படிப் பெற்றால் பெற்றவர் நஷ்டமடைய வேண்டிய நிலை ஏற்படும்.

வீடு, நிலம் போன்றவற்றிற்கு இது போன்ற பராமரிப்புச் செலவுகள் எதுவும் இல்லை என்பதால் அவற்றை அடைமானமாகப் பெற்றால் பயன்படுத்தக் கூடாது. அவ்வாறு பயன்படுத்துவது அதற்கான வாடகையை வட்டியாக வாங்குவதற்குச் சமம்.

மேற்கண்ட ஹதீஸில் பிராணிகளைப் பயன்படுத்தலாம் என்று மேலோட்டமாகச் சொல்லாமல் "அதற்காகும் செலவுக்குப் பகரமாக' என்பதையும் சேர்த்துச் சொல்வதிலிருந்தே வீடு, நிலம் போன்றவற்றை அடைமானம் பெற்றவர் பயன்படுத்தக் கூடாது என்பது தெளிவாகின்றது.

அதே சமயம் அந்த வீட்டிற்கான வாடகையை நில உரிமையாளருக்குக் கொடுத்து விட்டு அந்த நிலத்தைப் பயன்படுத்திக் கொள்வதில் தவறில்லை.

## பராமரிப்புச் செலவுக்காக பயன்படுத்தலாம்

சில பொருட்கள் செலவு செய்து பராமரிக்கப்படாவிட்டால் அழிந்துவிடும். இதுமாதிரியான பொருட்களை அடைமானமாகப் பெற்றால் அவற்றை பராமரிக்கும் செலவுக்காக இவற்றை பயன்படுத்திக்கொள்ளலாம்.

இதேப் போன்று பயன்படுத்தாமல் போட்டு வைத்தால் வீணாகிவிடும் பொருட்களும் உள்ளது. உதாரணமாக ஒருவர் காரை அடைமானமாகக் கொடுக்கின்றார். இந்தக் காரை பராமரித்து பயன்படுத்தினால் வீணாகது. பயன்படுத்தாமல் போட்டு வைத்தால் வீணாகிவிடும்.

இதுமாதிரியான வாகனங்களை அடைமானமாக பெற்றவர் பொருளுக்குரியவரின் அனுமதியுடன் பயன்படுத்தினால் தவறில்லை. ஏனென்றால் இந்த வாகனங்களை பராமரிக்க வேண்டிய பொறுப்பும் செலவு செய்யும் நிலையும் உள்ளது.

## ஆயுள் காப்பீடு (லைஃப் இன்சூரன்ஸ்)

சிலர் இன்சூரன்ஸ் முழுவதும் கூடாது என்று இதன் அனைத்து வகைகளையும் ஒரே அடியாக மறுத்துவிடுகிறார்கள். சிலர் அனைத்து இன்சூரன்ஸ்களையும் அனுமதிக்கப்பட்டது என்று பொதுவாக அனுமதித்து விடுகின்றனர்.

மார்க்க அடிப்படையில் சிந்தித்தால் இன்சூரன்ஸில் அனுமதிக்பட்டவையும் தடைசெய்யப்பட்டவையும் இருப்பதை அறியலாம். இன்சூரன்ஸ் என்ற சொல் குர்ஆனிலோ நபிமொழிகளிலோ கூறப்படவில்லை. இது நவீன காலத்தில் அறிமுகப்படுத்தப்பட்ட முறையாகும்.

இதில் வட்டி மோசடி ஏமாற்றுதல் சூதாட்டம் ஆகிய மார்க்கம் தடை செய்த அம்சங்கள் ஏதாவது இருந்தால் கூடாது என்று நாம் முடிவெடுக்கலாம்.

இன்சூரன்ஸில் லைஃப் இன்சூரன்ஸ் (ஆயுள் காப்பீடு) என்றொரு வகை உள்ளது. குறிப்பிட்ட வருடங்கள் வரை ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்டத் தொகையை ஆயுள் காப்பீடு நிறுவனத்துக்கு செலுத்த வேண்டும். இடைப்பட்ட காலத்தில் மரணம் ஏறபட்டால் அந்நிறுவனம் ஒரு தொகையை இறந்தவர் குடும்பத்துக்கு செலுத்தும்.

உதாரணமாக மாதம் ஆயிரம் என்ற கணக்கில் 10 வருடங்கள் செலுத்த வேண்டும் என ஒப்பந்தம் செய்யப்படுகின்றது. 10 வருடத்தில் மொத்தம் ஒரு லடச்த்து இருபதாயிரம் ரூபாய் கட்டியிருப்போம். ஆனால் 10 வருடங்கள் கழித்து தொகையை நம்மிடம் திருப்பித் தரும் போது ஒரு லட்சத்து ஐம்பதாயிரம் ரூபாய் கொடுப்பார்கள். இதற்கு ஆயுள் காப்பீடு என்று கூறப்படுகின்றது.

இந்த முறையில் வட்டி இருப்பதால் இது தடைசெய்யப்பட்டதாகும். நாம் கொடுத்தத் தொகை ஒரு லட்சத்து இருபதாயிரமாக இருக்க ஒன்றரை லட்சம் வாங்கினால் 30 ஆயிரம் ரூபாய் நாம் கூடுதலாகப் பெறுகிறோம். இது வட்டியாகும்;.

அதே நேரத்தில் கூடுதல் தொகையைப் பெறாமல் நாம் கொடுத்த பணத்தை மட்டுமே திரும்பப் பெற்றால் அது தவறல்ல. இது அனுமதிக்கப்பட்ட சேமிப்பு முறையாகும்.

**ஷரீஅத் பைனான்ஸ்**

நம் நாட்டில் உள்ள சில இஸ்லாமிய நிறுவனங்களும் அபுதாபி போன்ற சில இஸ்லாமிய நாடுகளும் ஷரீஅத் பைனான்ஸ் என்ற பெயரில் தந்திரம் செய்து வட்டி வாங்கிக்கொண்டிருக்கின்றன.

இஸ்லாமிய வங்கி என்று தங்களைக் கூறிக்கொள்ளும் இந்த நிறுவனத்திடம் ஒருவர் கார் வாங்க பத்து லட்சம் ரூபாய் கடனாக கேட்டால் காரை நாங்களே வாங்கித் தருகிறோம் என்று சொல்வார்கள்.

இந்த வங்கி பத்து லட்சம் ரூபாக்கு  இவர் கேட்ட காரை வாங்கி இவரிடம் 11 லட்சத்துக்கு கொடுக்கும். இவர் குறிப்பிட்ட காலத்துக்குள் 11 லட்சத்தை கட்ட வேண்டும். வியாபாரம் என்ற பெயரில் வட்டி வாங்குவதற்காக இவ்வாறு தந்திரம் செய்கின்றனர்.

10 லட்சம் ரூபாய்க்கு கிடைக்கும் காரை 11 லட்சம் கொடுத்து எந்த அறிவாலியும் வாங்க மாட்டான். வங்கியில் வாங்கினால் கடன் கிடைக்கும் என்பதற்காகவே வங்கியிடம் 11 லட்சத்தை செலுத்துகிறான். கடனுக்காக கூடுதல் தொகையை செலுத்துவது தான் வட்டி ஆகும். இந்த அம்சம் இந்த பைனான்ஸில் உள்ளது.

மேலும் இந்த நிறுவனம் வாகனங்களை விற்கும் தொழிலை செய்யவில்லை. தான் கொடுக்கும் கடன் தொகைக்கு கூடுதல் பணத்தை பெறுவதற்காகவே வாகனத்தை வாங்கி தந்திரம் செய்கின்றது.

இதில் வட்டி என்ற அம்சத்தோடு மார்க்கம் தடைசெய்துள்ள இன்னொரு அம்சமும் அடங்கியுள்ளது. இருவருக்கு மத்தியில் வியாபாரம் நடக்கும் போது தேவையில்லாமல் இடையில் குறிக்கிட்டு பொருளின் விலையை உயர்த்திவிடுவது கூடாது.

பத்து லட்சம் ரூபாய்க்கு கார் வாங்க நினைப்பவரிடம் இந்த நிறுவனம் குறுக்கிட்டு பதினோறு லட்சமாக உயர்த்திவிடுகின்றது. எனவே இது தவறான முறையாகும்.

**வங்கி தரும் வட்டியை வாங்கக்கூடாது**

வங்கிகளில் தரக்கூடிய கூடுதல் பணம் மானியம் போனஸ் போன்ற பெயர்களில் வழங்கப்பட்டாலும் நிச்சயமாக அது வட்டி தான். சில அறிவிலிகள் வங்கி வட்டி கூடும் என்று தவறான தீர்ப்பு வழங்கி மக்களை வழிகெடுத்துக்கொண்டு இருக்கின்றார்கள்.

வங்கி நம்மிடம் பணம் வாங்கியதற்காக மாதம் மாதம் பணத்தின் அளவுக்கு ஏற்ப கூடுதல் பணத்தை வழங்குகிறது. காலம் கடப்பதற்கும் பணம் அதிகரிப்பதற்கும் ஏற்ப கணக்குப் போட்டு கூடுதலான பணத்தை வங்கிகள் கொடுக்கின்றன. இதற்கு வட்டி என்று சொல்லாமல் வேறு என்ன சொல்ல முடியும்?

வட்டிப் பணம் தானாக தேடி வரும் போது அதை வாங்கலாமே என்று மனம் சொல்லும். இதை வாங்கினால் இறைவனுடைய கோபத்துக்கு ஆளாக நேரிடும். வேறு வழியில் இறைவன் நமக்கு பொருளாதாரத்தில் இழப்பை ஏற்படுத்திவிடுவான். எனவே இறைவனுக்கு பயந்து இதை புறக்கணித்துவிட வேண்டும்.

வங்கி தரும் வட்டிப் பணத்தை நாம் வாங்கா விட்டால் அதை வேறு யாராவது எடுத்துக்கொள்வார்களே? இஸ்லாத்தின் எதிரிகள் அதை பயன்படுத்துவார்களே? என்றெல்லாம் யூகித்து வட்டிப் பணத்தை வாங்க முயற்சிக்கக் கூடாது.

அது நம்முடைய பணம் இல்லை என்பதால் அந்தப் பணத்தைப் பற்றி நாம் கவலைப்படுவது தேவையற்றது. ஒருவன் ஒருப் பொருளை திருடி நம்மிடத்தில் கொடுக்கின்றான். அதை நாம் வாங்காவிட்டால் வேறு ஒருவன் வாங்கிச் சென்றுவிடுவான். இதற்காக அந்த திருட்டுப் பொருளை நாம் வாங்க முடியுமா?

இலவசமாக சாராயம் கிடைக்கின்றது. நாம் வாங்காவிட்டால் வேறு யாராவது வாங்கிவிடுவார்கள் என்பதற்காக இந்த சாராயத்தை வாங்கி நாம் குடிக்கலாமா? நாம் வாங்காவிட்டால் அடுத்தவன் வாங்கிவிடுவான் என்ற வாதம் தவறானது.

**தர்மம் செய்வதற்காக வட்டி வாங்கக் கூடாது**

வங்கி தரும் வட்டிப் பணத்தை வாங்கி அதை நாம் பயன்படுத்தாமல் ஏழை எளியவர்களுக்கு வழங்கலாம் என்று பலர் நினைக்கின்றனர். உண்ணுவது போன்ற காரியங்களுக்கு பயன்படுத்தாமல் கழிவறைக்கு செலவிடலாம் என்றும் கூறுகின்றனர். இதுவும் தவறாகும்.

பொருளாதாரம் தொடர்பாக இஸ்லாம் கூறும் பொதுவான ஒரு அடிப்படையை இவர்கள் மறந்துவிட்டார்கள். எந்தப் பொருளை நாம் பயன்படுத்த மார்க்கத்தில் அனுமதி உள்ளதோ அந்தப் பொருளை நாம் மற்றவர்களுக்கு கொடுக்கலாம். எந்தப் பொருளை நாம் பயன்படுத்துவது கூடாதோ அந்தப் பொருளை நாம் மற்றவர்களுக்கும் கொடுப்பது கூடாது.

உதாரணமாக பன்றி இறைச்சி மது ஆகியவற்றை நாம் சாப்பிடக்கூடாது. எனவே இதை மற்றவர்களுக்கு நாம் சாப்பிட கொடுக்கக்கூடாது. இது போன்று தான் வட்டிப் பணமும். இதை நாம் பயன்படுத்தக்கூடாது என்றால் இதை வாங்கி மற்றவர்களுக்கு கொடுப்பதும் கூடாது.

ஹராமான சம்பாத்தியத்திலிருந்து நற்பணிகளுக்கு செலவிட்டால் இறைவன் இதை ஏற்றுக்கொள்ளமாட்டான்.

அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் "மக்களே! அல்லாஹ் தூயவன். தூய்மையானதையே அவன் ஏற்கின்றான். அல்லாஹ் தன்னுடைய தூதர்களுக்குக் கட்டளையிட்ட வற்றையே இறைநம்பிக்கையாளர்களுக்கும் கட்டளையிட்டுள்ளான்" என்று கூறினார்கள்.

முஸ்லிம் (1844)

ஒருவருடைய பணத்தை திருடி தர்மம் செய்தால் இந்த தர்மத்துக்கு இறைவன் கூலி வழங்கமாட்டான். மாறாக திருடியதற்கான தண்டனையை கொடுப்பான். வட்டி வாங்கி தர்மம் செய்வது இது போன்றதாகும்.

அதை வாங்கி பிறருக்குக் கொடுக்கலாம் என்றால் அந்தப் பொருள் நம்முடையது என்று வாக்கு மூலம் தந்ததாகவே பொருள். வாங்கிய குற்றத்திற்குத் தண்டனை பெற வேண்டியது ஏற்படும்.

எனவே வங்கியில் நாம் கொடுத்த பணத்தை மட்டுமே பெற்றுக்கொண்டு வட்டிப் பணத்தை வேண்டாம் என்று கூறி வாங்க மறுத்துவிட வேண்டும். வங்கியில் புதிதாக அக்கவுண்டை உருவாக்கும் போதே எனக்கு வட்டி போட வேண்டாம் என்று கூறினால் நம்முடைய கணக்கில் வட்டியை சேர்க்கமாட்டார்கள்.

**வட்டிப் பணத்தில் கழிவறை கட்டலாமா?**

வங்கி தரும் வட்டிப் பணத்தை வாங்கி உண்ணுகின்ற வகைக்கு பயன்படுத்தாமல் கழிவறை கட்டும் பணிக்கு பயன்படுத்திக் கொள்ளலாம் என்று மார்க்க அறிவில்லாதவர்கள் தவறான தீர்ப்பைக் கூறுகின்றனர்.

கழிவறையானாலும் ஹலாலான தொழிலில் தான் கட்ட வேண்டும். ஒருவனுடைய பணத்தைத் திருடி நம் வீட்டுக் கழிவறையை சொகுசாக வசதியாக கட்டினால் இந்த திருட்டுச் செயல் நியாயமாகிவிடுமா? வட்டிப் பணத்தில் கழிவறை கட்டுவதும் இது போன்றதாகும்.

உண்ணுவது மட்டுமின்றி வேறு தேவைகளுக்காகவும் ஹராமான முறையில் பொருளீட்டக்கூடாது.

ஒரு மனிதரைப் பற்றிச் சொன்னார்கள். “அவர் தலைவிரி கோலத்துடனும் புழுதி படிந்த நிலையிலும் நீண்ட பயணம் மேற் கொள்கிறார். அவர் தம் கரங்களை வானை நோக்கி உயர்த்தி ‘என் இறைவா, என் இறைவா’ என்று பிரார்த்திக்கிறார். ஆனால், அவர் உண்ணும் உணவு தடை செய்யப்பட்டதாக இருக்கிறது; அவர் அருந்தும் பானம் தடை செய்யப்பட்டதாக இருக்கிறது; அவர் அணியும் உடை தடை செய்யப்பட்டதாக இருக்கிறது; தடை செய்யப்பட்ட உணவையே அவர் உட்கொண்டிருக்கிறார். இத்தகையவருக்கு எவ்வாறு (அவரது பிரார்த்தனை) ஏற்கப்படும்?” என்று கூறினார்கள்.

முஸ்லிம் (1844)

இந்த செய்தியில் நபி (ஸல்) அவர்கள் ஹராமான சம்பாத்தியத்தில் உண்ணுவது கூடாது என்று சொல்வதுடன் அதன் மூலம் ஆடை அணிவதையும் குறிப்பிடுகிறார்கள்.

நாம் அன்றாட வாழ்வில் கழிவறையை பல முறை பயன்படுத்துகிறோம். இதற்காக வட்டிப் பணத்தை செலவிட்டாலும் நாம் வட்டி வாங்கிய பாவத்திலிருந்து விடுபட முடியாது.

**வட்டிக்கு கடன் வாங்கி வழிபாடு செய்யக் கூடாது**

குர்பானி அகீகா ஹஜ் போன்ற வணக்கங்களை நிறைவேற்றுவதற்கு பொருளாதாரம் தேவைப்படுகின்றது. இவற்றை செய்வதற்குத் தேவையான பொருளாதாரம் நம்மிடத்தில் இருந்தால் இந்த வணக்கங்களை தாராளமாக நிறைவேற்றலாம். பொருளாதாரம் இல்லாவிட்டால் இதை செய்ய வேண்டிய அவசியமில்லை.

ஆனால் சிலர் கடன் வாங்கி இந்த வணக்கங்களை செய்ய நினைக்கின்றனர். இது தவறாகும். மார்க்கம் கூறாத சுமையை நம்மீது சுமத்திக்கொள்வதாகும். இதை இஸ்லாம் அனுமதிக்கவில்லை.

எவரையும் அவரது சக்திக்குட்பட்டே தவிர அல்லாஹ் சிரமப்படுத்த மாட்டான்.

அல்குர்ஆன் (2 : 286)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

இந்த மார்க்கம் எளிதானது. இந்த மார்க்கத்தை எவரேனும் (தம்மீது) சிரமமானதாக ஆக்கிக் கொண்டால், அது அவரை மிகைத்துவிடும். எனவே, (அனைத்துக் காரியங்களிலும்) நடுநிலையையே கடைப்பிடியுங்கள். இயன்றவற்றைச் செய்யுங்கள்; நற்செய்தியையே சொல்லுங்கள்;

இதை அபூஹுரைரா (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நூல் : புகாரி (39)

குறிப்பாக வட்டிக் கடன் வாங்கி வணக்கங்களை புரிவதால் எந்த நன்மையும் கிடைக்காது. இத்துடன் இந்தப் பாவத்தின் காரணத்தால் இறைவனுடைய தண்டனைக்கு ஆளாக நேரிடும்.

**வங்கியில் வேலை செய்யலாமா?**

வட்டிப் பணத்தை வசூலித்தல் கணக்கு எழுதுதல் இது போன்று வட்டியுடன் தொடர்புடைய வேலைகளை செய்யக்கூடாது. வட்டியுடன் தொடர்புடைய வேலைகளை செய்யக்கூடாது என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

ஜாபிர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், வட்டி வாங்குபவரையும் வட்டி கொடுப்பவரையும், அதற்குக் கணக்கு எழுதுபவரையும் அதன் இரு சாட்சிகளையும் சபித்தார்கள். மேலும், “இவர்கள் அனைவரும் (பாவத்தில்) சமமானவர்கள் ஆவர்” என்று கூறினார்கள்.

நூல் : முஸ்லிம் (3258)

அதே நேரத்தில் வட்டியுடன் தொடர்பில்லாத வேறு வேலைகளை வங்கியில் இருந்து கொண்டு செய்தால் அதில் தவறேதுமில்லை. உதாரணமாக வங்கியில் ஆபீஸ் பாய், கிளீனிங் போன்ற வேலைகள் வட்டியுடன் தொடர்புடையவை அல்ல.

குறிப்பிட்ட சிலருக்கு வட்டி இல்லாத கடன் வழங்குவதற்காக வங்கியில் ஒரு தனிப்பிரிவு உள்ளது. இதற்கு நம்மைப் பொறுப்பாளராக நியமிக்கிறார்கள். தாராளமாக இதில் நாம் பணியாற்றலாம். வட்டியுடன் தொடர்பில்லாத அனைத்து வேலைகளும் இது போன்று அனுமதிக்கப்பட்டுள்ளது.

வங்கியில் ஊழியராக பணியாற்றினால் சில நேரங்களில் வட்டியுடன் நேரடியாக சம்பந்தப்பட்ட வேலைகளையும் நாம் செய்துகொடுக்க வேண்டிய நிலை ஏற்படலாம். வட்டிக் கணக்கு நோட்டுகளை கொண்டு செல்வது போன்ற வேலைகளை செய்யுமாறு வங்கி கூறினால் இதை செய்து கொடுக்கக்கூடாது.

**முஸ்லிமல்லாதவர்கள் வட்டி வாங்க துணை செய்யக்கூடாது**

இஸ்லாத்தில் தடை செய்யப்பட்டவை இரண்டு வகைகளில் உள்ளன. முஸ்லிம் முஸ்லிமல்லாதவர் என்ற வேறுபாடில்லாமல் அனைவருக்கும் தடை செய்யப்பட்டவை ஒரு வகையாகும்.

மற்றொரு வகை முஸ்லிமுக்கு மட்டும் தடுக்கப்பட்டு முஸ்லிமல்லாதவர்கள் செய்தால் தடுக்காமல் விடப்படுபவை.

மது அருந்துவது முஸ்லிமுக்குத் தடை செய்யப்பட்டது போலவே இஸ்லாமிய அரசில் முஸ்லிமல்லாதவருக்கும் இது தடை செய்யப்பட்டதாகும். முஸ்லிமல்லாதவர் மது அருந்தினாலும் விற்பனை செய்தாலும் அது இஸ்லாமிய அரசில் தடுக்கப்படும். அதே நேரத்தில் பட்டாடை அணிவது முஸ்லிம் ஆண்களுக்குத் தடை செய்யப்பட்டுள்ளது. ஆனால் முஸ்லிமல்லாத ஆண்களுக்கு இது தடை இல்லை. எனவே பட்டாடையை முஸ்லிமல்லாத ஆண்களுக்கு விற்பனை செய்யலாம்.

அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

(ஒரு முறை) உமர் பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் (மஸ்ஜிதுந் நபவீ) பள்ளிவாசல் நுழைவாயிலருகே கோடுபோட்டபட்ட அங்கி ஒன்று விற்கப்படுவதைக் கண்டார்கள். உடனே, அல்லாஹ்வின்தூதரே! இதைத் தாங்கள் வாங்கிக் கொண்டால் ஜுமுஆ நாளிலும் தூதுக் குழுக்கள் தங்களிடம் வரும் போதும் அணிந்து கொள்ளலாமே! என்று சொன்னார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், மறுமையில் எந்தப் பேறும் இல்லாதவர் தாம் (இம்மையில்) இதை அணிவார் என்று கூறினார்கள். பின்னர் அதே வகையைச் சேர்ந்த சில பட்டு

அங்கிகள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுக்கு வந்தன. அவற்றில் ஒன்றை உமர் (ரலி) அவர்களுக்கு நபி (ஸல்) அவர்கள் கொடுத்தார்கள். அப்போது உமர் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதரே! எனக்கு இதை அணிந்து கொள்ளக் கொடுக்கிறீர்களே! (பனூ தமீம் குலத்து நண்பர்) உதாரித் அவர்கள் வழங்கிய கோடு போட்ட பட்டு அங்கி விஷயத்தில் வேறு விதமாகச் சொன்னீர்களே! என்று கேட்டார்கள். அதற்கு அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள், அதை நீங்கள் அணிந்து கொள்ள வேண்டுமென்பதற்காக உமக்கு நான் கொடுக்கவில்லை! (அதன் மூலம் வேறு ஏதேனும் வகையில் நீங்கள் பயன் பெற்றுக் கொள்ளவே நான் வழங்கினேன்) என்று கூறினார்கள். ஆகவே, உமர்பின் அல்கத்தாப் (ரலி) அவர்கள் மக்காவிலிருந்த இணை வைப்பாளரான தம் சகோதரர் ஒருவருக்கு அதை அணியக் கொடுத்து விட்டார்கள். இந்த அடிப்படையில் தான் தமக்குக் கிடைத்த பட்டாடையை முஸ்லிமல்லாத தன் சகோதரருக்கு உமர் ரலி வழங்கினார்கள்.

புஹாரி 886

வட்டி, விபச்சாரம், மது, சூது, மோசடி, லஞ்சம், திருட்டு, கொலை, மற்றும் அனைவருக்கும் கேடு விளைவிப்பவை இஸ்லாத்தில் தடுக்கப்பட்டுள்ளது என்றால் இஸ்லாமிய அரசில் முஸ்லிமல்லாதவருக்கும் அது தடை தான். முஸ்லிமல்லாதவருக்காக மட்டும் ஒருவர் விபச்சார விடுதி நடத்துவது எவ்வாறு குற்றமோ அது போல் வட்டிக்கு விடுவதும், வட்டிக்கு வாங்குவதும் முஸ்லிமல்லாதவருக்கும் தடுக்கப்பட்டது தான். இந்த பாவமான காரியத்துக்கு நாம் துணைபோகக்கூடாது.

நன்மையிலும், இறையச்சத்திலும் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளுங்கள்! பாவத்திலும், வரம்பு மீறலிலும் ஒரு வருக்கொருவர் உதவிக் கொள்ளாதீர்கள்! அல்லாஹ்வை அஞ்சுங்கள்! அல்லாஹ் கடுமையாகத் தண்டிப்பவன்.

அல்குர்ஆன் (5 : 2)

வட்டிக்குத் துணைபோகக்கூடியவர்களை நபி (ஸல்) அவர்கள் சபித்துள்ளார்கள்.

ஜாபிர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், வட்டி வாங்குபவரையும் வட்டி கொடுப்பவரையும், அதற்குக் கணக்கு எழுதுபவரையும் அதன் இரு சாட்சிகளையும் சபித்தார்கள். மேலும், "இவர்கள் அனைவரும் (பாவத்தில்) சமமானவர்கள் ஆவர்" என்று கூறினார்கள்.

நூல் : முஸ்லிம் (3258)

எனவே வேறுக் கொள்கையில் உள்ளவர்கள் வட்டி வாங்கினாலும் அதற்கு நாம் உதவி செய்யக்கூடாது.

**ஃபிக்சட் டெபாசிட்**

வங்கியில் ஃபிக்சட் டெபாசிட் என்ற முறை ஒன்று உள்ளது. குறிப்பிட்ட வருடத்துக்கு மாதம் மாதம் குறிப்பிட்டத் தொகையை கட்ட வேண்டும்.

உதாரணமாக 5 வருடத்துக்கு மாதம் மாதம் 1000 ரூபாய் கட்ட வேண்டும். நாம் கட்டிய பணத்தை 5 வருடம் முடிவதற்கு முன்பு பெற முடியாது. 5 வருடம் கழித்தே பெற முடியும்.

5 வருடத்தில் நாம் அறுபதாயிரம் ரூபாய் கட்டி இருப்போம். ஆனால் வங்கி நமக்கு பணத்தை திருப்பித் தரும்போது நாம் கட்டிய தொகையை மட்டும் கொடுக்காமல் அதை விட கூடுதலான பணத்தையும் சேர்த்துக் கொடுக்கும்.

உதாரணமாக நாம் கட்டிய தொகை அறுபதாயிரம் என்றால் வங்கி நமக்கு ஒரு லட்சம் ரூபாய் கொடுக்கும். ஐந்து வருட காலங்கள் நம்முடைய பணத்தை

பயன்படுத்தியதற்காக வங்கி கூடுதலாக நாற்பதாயிரம் ரூபாயை கொடுக்கின்றது. இது தெளிவான வட்டியாகும்.

**கடன் அட்டை பயன்படுத்தலாமா?**

வங்கியில் கணக்கு வைத்தவர்களுக்கு வங்கி கடன் அட்டையை வழங்கும். இந்த அட்டையை பன்படுத்தி வெளி இடங்களில் பொருட்களை வாங்க முடியும். நாம் வாங்கிய பொருட்களுக்கு வங்கி பணத்தை செலுத்தும். இந்த அட்டைக்கு கிரடிட் கார்டு (கடன் அட்டை) என்று சொல்லப்படுகின்றது.

இவ்வாறு கடன் வாங்கியவருக்கு வங்கி குறிப்பிட்ட நாட்கள் தவணை கொடுக்கும். அந்த குறிப்பிட்ட நாட்களுக்குள் வங்கி கொடுத்த கடனை திருப்பி அடைத்து விட வேண்டும். அடைக்காவிட்டால் கடன் வாங்கியவர் வங்கியிடம் வட்டி கட்ட வேண்டும். வங்கியுடன் மேற்கண்டவாறு ஒப்பந்தம் செய்து கையெழுத்து இட்டால் தான் வங்கி கடன் அட்டையை கொடுக்கும்.

வங்கி கொடுக்கும் அவகாசத்துக்குள் கடனை அடைத்துவிட்டால் வட்டி கட்ட வேண்டிய நிலை வராது. எனவே வட்டி கட்டாத வகையில் இந்த அட்டையை வாங்கி பயன்படுத்தலாம் என்று சிலர் கூறுகின்றனர்.

இது சரியானக் கருத்து போலத் தெரிந்தாலும் சற்று ஆழமாக சிந்தித்தால் கடன் அட்டையை பன்படுத்துவது முற்றிலும் தவறானது என்பதை அறியலாம்.

ஒருவர் வட்டி கட்டாமல் கடன் அட்டையை பயன்படுத்திக் கொண்டால் அவர் வட்டி வாங்கிய பாவத்தையோ வட்டி கொடுத்த பாவத்தையோ செய்யவில்லை. ஆனால் மார்க்கத்திற்கு மாற்றமான ஒரு காரியத்தை ஏற்றுக்கொண்டவராகிவிடுகின்றார்.

குறிப்பிட்ட நாட்களை கடந்தால் வட்டி கட்டுவேன் என்று வங்கியிடம் ஒப்பந்தம் செய்கிறார். இது மார்க்கத்திற்கு மாற்றமான ஒப்பந்தம். ஒரு முஸ்லிம் இதில் எப்படி கையெழுத்து இட முடியும்?

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

உங்களில் ஒருவர் ஒரு தீமையை (-மார்க்கத்திற்கு முரணான ஒரு செயலை)க் கண்டால் அவர் அதைத் தமது கரத்தால் தடுக்கட்டும். முடியாவிட்டால் தமது நாவால் (சொல்லித் தடுக்கட்டும்). அதுவும் முடியாவிட்டால் தமது உள்ளத்தால் (அதை வெறுத்து ஒதுக்கட்டும்). இந்த (இறுதி) நிலையானது இறைநம்பிக்கையின் பலவீனமா(ன நிலையா)கும்.

அறிவிப்பவர் : அபூ சயீத் அல்குத்ரீ (ரலி) அவர்கள்

நூல் : முஸ்லிம் (78)

அல்லாஹ்வின் வேதத்தில் இல்லாத நிபந்தனைகளைக் கூறுபவர்களுக்கு என்ன நேர்ந்தது? யார் அல்லாஹ்ாவின் வேதத்தில் இல்லாத நிபந்தனையை விதிக்கிறார்களோ அவர்களுடைய அந்த நிபந்தனை வீணானது; (செல்லாதது;) அவர்கள் நூறு நிபந்தனைகளை விதித்தாலும் சரியே! அல்லாஹ்வின் நிபந்தனைதான் நிறைவேற்றத்தக்கதும், உறுதியானதும் ஆகும்! எனக் கூறினார்கள்.

அறிவிப்பவர் : ஆயிஷா (ரலி)

நூல் : புகாரி (2155)

இவ்வாறு ஒப்பந்தம் செய்தால் ஒரு தீமையை அங்கீகரித்த குற்றம் ஏற்படும். இந்த ஒப்பந்தம் செய்யாமல் கடன் அட்டையை வாங்க முடியாது.

வங்கி இவ்வாறு கடன் வழங்குவதற்கு ஒரு முக்கிய காரணமும் உள்ளது. கடன் வாங்கி விட்டால் இயலாமை அலட்சியம் மறதி போன்ற காரணங்களால்

குறிப்பிட்ட நாட்களுக்குள் பணத்தை செலுத்த முடியாத நிலை மனிதனுக்கு ஏற்படும். கடன் அட்டை வாங்கியவன் பெரும்பாலும் வட்டி கட்டும் நிலைக்கு ஆளாகிவிடுவான் என்ற எதிர்பார்ப்பில் வங்கி இவ்வாறு செய்கின்றது.

ஹராமான விசயங்களை தவிர்த்துக் கொள்வதோடு அதில் விழுவதற்கான வாய்ப்புகளையும் பேணுதல் அடிப்படையில் தவிர்க்க வேண்டும் என மார்க்கம் அறிவுறுத்துகின்றது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

அனுமதிக்கப்பட்டவையும் மிகத் தெளிவானவை. மேலும் அனுதிக்கப்படாதவையும் தெளிவானவையாய் இருக்கின்றன. இவ்விரண்டிற்கும் இடையில் சந்தேகத்திற்கு இடமானவையும் இருக்கின்றன. அவற்றை மக்களில் அதிகம் பேர் அறிய மாட்டார்கள். எனவே எவர் சந்தேகத்திற்கு இடமானவற்றைத் தவிர்த்துக்கொள்கிறாரோ அவர் தமது மார்க்கத்தையும் காப்பாற்றிக்கொள்கிறார்; மானத்தையும் காப்பாற்றிக்கொள்கிறார். எவர் சந்தேகத்திற்கிடமானவைகளில் தலையிடுகிறாரோ அவர், (அனுமதிக்கப்படாதவைகளில் தலையிடுகிறார்.) வேலி யோரங்களில் (கால்நடைகளை) மேய்ப்பவர் வேலிக்குள்ளேயே (கால்நடைகளை) மேயவிட நேரும். எச்சரிக்கை! ஒவ்வொரு மன்னனுக்கும் ஓர் எல்லை இருக்கின்றது அல்லாஹ்வின் நாட்டில் அவனது எல்லை (வேலி) அவனால் தடைவிதிக்கப்பட்டவையே. அறிக:

இதை நுஅமான் பின் பஷீர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நூல் : புகாரி (52)

எனவே வட்டியில் நம்மை தள்ள நினைப்பவர்களுக்கு நாம் இரையாகிவிடக் கூடாது.

**சொன்னால் குற்றமா?**

நம்முடைய செயல்பாட்டில் வட்டியை கொண்டு வந்தால் தானே குற்றமாகும். வட்டி செலுத்துவேன் என்று வாயளவில் கூறுவது எப்படி தவறாகும் என்று சிலர் கேட்கின்றனர்.

மார்க்கத்தில் பாவமான காரியத்தை செய்வது குற்றமாக இருப்பதைப் போன்று பாவமான காரியத்தை பேசுவதும் குற்றமாகும். ஒரு பாவத்தை மனதிற்குள் நினைத்தால் அதற்கு குற்றம் ஏற்படாது. ஆனால் அதை பேசிவிட்டாலோ செய்துவிட்டாலோ அதற்கு குற்றம் ஏற்படும்.

வலப்புறமும், இடப்புறமும் எடுத்தெழுதும் இருவர் அமர்ந்து எடுத் தெழுதும் போது, அவன் எந்தச் சொல்லைப் பேசினாலும் அவனிடம் கண்காணிக்கும் எழுத்தாளர் இல்லாமல் இருப்பதில்லை.

அல்குர்ஆன் (50 : 18)

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

என் உம்மத்தினரின் உள்ளங்களில் ஊசலாடும் தீய எண்ணங்களை, அவர்கள் அதன் படி செயல்படாதவரை அல்லது அதை (வெளிப்படுத்தி)ப் பேசாதவரை எனக்காக அல்லாஹ் மன்னித்து விட்டான்.

இதை அபூஹுரைரா(ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

நூல் : புகாரி (2528)

ஒரு விசயத்தை பேசுவதும் எழுதுவதும் ஒன்றாகும். ஒருவரை திட்டிப் பேசினால் எப்படி கோபப்படுவாரோ அது போன்று திட்டி எழுதினாலும் கோபப்படுவார். சொல்லப்போனால் ஒப்பந்தம் போன்ற விசயங்களில் பேச்சை விட எழுத்தே வழுமை வாய்ந்ததாக இருக்கின்றது.

எனவே வட்டி கொடுப்பேன் என்று கூறுவதும் எழுதிக்கொடுப்பதும் தவறாகும்.

**மல்டிலெவல் மார்க்கெட்டிங் கூடுமா?**

எம்எல்எம் (மல்டிலெவல் மார்க்கெட்டிங்) சங்கிலித்தொடர் வியாபாரம் என்பதில் பல வகைகள் உள்ளன. அனைத்து முறைகளுமே ஏமாற்றுதல், மோசடி, பிறர் பொருளை அநியாயமாக அபகரித்தல் போன்றவைதான் நிறைந்து காணப்படுகின்றன. இதனை சங்கிலித் தொடர் வியாபாரம் என்று கூறுவதை விட சங்கிலித் தொடர் பித்தலாட்டம் என்று சொல்வதுதான் மிகப் பொருத்தமானதாகும்.

குறைந்த தொகைக்கு அதிக மதிப்புள்ள பொருள் வழங்குவது வியாபாரத்தில் சாத்தியமற்ற ஒன்றாகும். என்றாலும் சில கம்பெனிகள் இவ்வாறு அறிவிப்பு செய்வார்கள்.

உதாரணத்திற்கு நீங்கள் 2000 ரூபாய் கட்டினால் மூன்று மாதம் கழித்து 10000 மதிப்புள்ள கலர் டிவி தருவோம் என்று விளம்பரம் செய்வார்கள்.

அவ்வாறே சிலருக்கு வழங்கவும் செய்வார்கள். சிறிய மீனைப் போட்டு பெரிய மீனைப் பிடிப்பது போல் இவ்வாறு சிலருக்கு வழங்கப்படுவதைப் பார்த்து ஆயிரக்கணக்கானோர் பணம் கட்டுவார்கள். இதைத்தான் அந்த ஏமாற்றுக் கம்பெனியினரும் எதிர்பார்த்தார்கள்.

இவ்வாறு அதிகமானோர் பணம் கட்டியவுடன் யாருக்கும் எதையும் வழங்காமல் மொத்தமாகப் பணத்தைக் கையாடல் செய்து சுருட்டிக் கொள்வார்கள்.

இவ்வாறு குறைவான பணத்திற்கு அதிக மதிப்புடைய பொருள் தரப்படும் என்று அறிவிக்கும் போதே இது ஒரு மோசடி வியாபாரம் என்பதை நாம் தெளிவாக விளங்கிக் கொள்ள முடியும்.

இது போன்று தான் மல்டிலெவல் மார்க்கெட்டிங் என்பதும் . இந்த சங்கிலித் தொடர் வியாபாரத்தில் பலவகைகள் உள்ளன.

**முதல்வகை**

நம்மிடம் ஒரு பெரும் தொகையைப் பெற்றுக் கொண்டு அதைவிட மிகக் குறைந்த மதிப்பிலான ஒரு பொருளைத் தருவார்கள்.

உதாரணத்திற்கு நாம் 50,000 (ஐம்பதாயிரம்) ரூபாய் கட்டினோம் என்று சொன்னால் 6 கிராம் தங்கக்காசு தருவார்கள். 6கிராம் தங்கக் காசிற்கு 15000 (பதினைந்தாயிரம்) ரூபாய் என்று வைத்துக் கொள்வோம். ஆனால் நம்மிடமிருந்து அதிகப்படியாக 35000 (முப்பத்தைந்தாயிரம்) ரூபாய் பிடித்து வைத்துக் கொள்வார்கள்.

இவ்வாறு நம்மிடமிருந்து ஒரு கணிசமான தொகையைக் கொள்ளையடித்து விடுவார்கள். .

நம்மிடம் பெற்ற பணத்தை விட மிகக் குறைவிலான மதிப்புள்ள பொருளைத் தந்து விட்டு அந்தப் பொருளைப் பற்றி பலவிதமான பொய்மூட்டைகள் அவிழ்த்து விடுவார்கள்.

இது சாதாரண தங்கக் காசு அல்ல. இதை ஆன்லைனில் விளம்பரம் செய்தால் பலகோடிக்கு விற்பனையாகிவிடும். இதைப் போன்று யாரும் தயாரிக்க முடியாது என்றெல்லாம் கூறி அப்பாவிகளை நம்ப வைப்பார்கள்.

பெரும் தொகையைக் கொடுத்து விட்டு அதைவிடக் குறைந்த மதிப்பிலான பொருளைப் பெறுவதற்கு யாரும் முன்வர மாட்டார்கள். இதற்காக அவர்களிடம் நீங்கள் இரண்டு உறுப்பினர்களைச் சேர்க்க வேண்டும். அவர்கள் இருவரும் இரண்டிரண்டு உறுப்பினர்களைச் சேர்க்க வேண்டும். இப்படி உங்களுக்குப் பின்னால் ஆறு பேர் சேர்ந்து விட்டால் உங்களுக்கு ஒரு இலட்சம் ரூபாய் போனஸாகக் கிடைக்கும் என்று கூறுவார்கள்.

அவ்வாறு ஆறு பேர் சேரவில்லை என்று சொன்னால் உங்களுடைய 35000 (முப்பந்தைந்தாயிரம்) ரூபாய் திரும்பக் கிடைக்காது என்று நம்மிடம் கையெழுத்தும் வாங்கிக் கொள்வார்கள்.

தான் இழந்த தொகையை எப்படியாவது சம்பாதிக்க வேண்டும் என்ற நோக்கத்தில் முதலில் பணம் கட்டியவர் தன்னைப் போல் ஆறு நபர்களிடம் பலவிதமான பொய்களைச் சொல்லி அவர்கள் ஒவ்வொருவரையும் ஐம்பதாயிரம் ரூபாய் பணத்தைப் பெற்று அந்தக் கம்பெனியிடம் வழங்குவார்.. தனக்கு கம்பெனி கூறியதைப் போன்று அவர்களிடம் அவர் கூறுவார்.

இவர்கள் ஒவ்வொருவரிடமும் அந்தக் கம்பெனி 35000 ரூபாய் பிடித்து வைத்துக் கொண்டு முதலாமவருக்கு சொன்னது போன்றே மற்றவர்களுக்குச் சொல்லுமாறு தனக்கு கீழ் உள்ளவரிடம் கூறும்.

ஆறு நபர்களைச் சேர்த்து விட்டவுடன் கிடைக்கும் பல இலட்சங்களில் முதலமாவருக்கு ஒரு சிறுதொகையை போனஸாக அந்தக் கம்பெனியினர் வழங்குவார்கள். அவர் தனக்குக் கீழ் உள்ளவர் ஆறு நபர்களைச் சேர்த்துவிட்டால் அவருக்கு குறிப்பிட்ட தொகையை போனஸாக வழங்குவார்.

இவ்வாறு நமக்குப் பின்னால் சங்கிலித் தொடர் போன்று இணைபவர்களின் எண்ணிக்கையைப் பொருத்து அதற்கு முன்னால் உள்ளவர்களுக்கு போனஸ் வழங்கப்படும். ஒவ்வொருவரும் தமக்குக் கிடைக்கும் பணத்தில் ஒரு பகுதியைத் தமக்குக் கீழ் உள்ளவர்களுக்கு போனஸாக வழங்குவார்கள்.

இதில் எந்த ஒரு வியாபாரமும் நடைபெறவில்லை. எந்தப் பொருளையும் வியாபாரம் செய்து அவர் இலாபம் சம்பாதிக்கவில்லை. ஒவ்வொருவரும் மற்றவர்களிடம் பலவிதமான பொய்களைச் சொல்லி இதில் இணையவைத்து அவருடைய பொருளைக் கொள்ளை அடிப்பதைத் தவிர இதில் வேறொன்றும் இல்லை.

ஒவ்வொருவரிடமும் அடிக்கும் கொள்ளையில் பெரும் பகுதியை அந்தக் கம்பெனி வைத்துக் கொள்ளும். சிறு பகுதியை உறுப்பினராகச் சேர்ந்தவர்களுக்கு வழங்கும்.

இவ்வாறு தனக்கு அதிகமான போனஸ் கிடைக்க வேண்டும் என்ற நோக்கத்தில் பலர் பல இலட்சங்களைப் பலரிடம் வாங்கி தனக்குப் பின்னால் பலர் இருப்பதைப் போன்று காட்டி சம்பாதிக்க வேண்டும் என்று நினைப்பார்.

இப்படி பல கோடிகள் சேர்ந்தவுடன் அந்தக் கம்பெனி அனைத்தையும் சுருட்டிக் கொண்டு உறுப்பினர்களுக்கு டாடா காட்டிவிடும்.

இது போன்ற மோசடி வியாபாரத்தில் எந்த ஒரு உறுப்பினரிடமும் அந்தக் கம்பெனி நேரடியாகச் சென்று பணத்தைப் பெறாது. ஒவ்வொருவருக்கும் தான் யாரிடம் பணம் கட்டினோம் என்பது மட்டும்தான் தெரியுமே தவிர அவருக்கு மேல் யார் இருக்கிறார் என்பது தெரியாது.

பணத்தை இழந்தவர்கள் யாரிடம் போய் கேட்பது என்று வழி தெரியாமல் விழி பிதுங்கி நிற்பார்கள்.

இன்றைக்கு அதிகமாகச் சம்பாதிக்க வேண்டும் என்ற பேராசையில் இது போன்ற மோசடி வியாபாரங்களில் ஈடுபட்டு பலகோடிகளை இழந்துள்ளனர். பலர் நஷ்டமடைந்து தற்கொலை செய்துள்ளனர்.

இப்படி அறியாத விதத்தில் பிறர் பொருளைக் கொள்ளை அடித்துச் சம்பாதிப்பதை எப்படி வியாபாரம் என்று கூறமுடியும்? இது எப்படி ஹலாலான வியாபாரமாக ஆகமுடியும்.

**இரண்டாவது வகை**

இந்த சங்கிலித் தொடர் வியாபாரத்தில் மற்றொரு வகையான மோசடியும் நடைபெறுகிறது.

அதாவது ஒரு குறிப்பிட்ட பொருளைப் பற்றி இல்லாத பொய்களைச் சொல்லி அதனை மிகப்பெரும் விலையில் யாருக்காவது விற்பதாகும்.

வியாபாரத்தில் பொய் சொல்லி சம்பாதிப்பது ஹராம் ஆகும். அது வியாபாரத்தின் பரக்கத்தை அழித்துவிடும்.

சாதரண ஒரு படுக்கையை இது அதி அற்புதமான சக்திவாய்ந்த மூலிகைப் படுக்கை அல்லது காந்தப் படுக்கை. இதில் படுத்தால் குறுக்கு வலி குணமாகிவிடும். மலட்டுத் தன்மை நீங்கி விடும். கேன்சர் குணமாகி விடும். இது போன்ற ஒரு கண்டுபிடிப்பை யாரும் இதுவரை கண்டுபிடிக்கவில்லை. இந்த ஆராய்ச்சி மையம் இதற்கு சர்ட்டிஃபிகேட் வழங்கியுள்ளது என்று பலவிதமான பொய்களைக் கூறி நம்பவைத்து மிக அதிகமான விலைக்கு விற்பனை செய்து விடுவார்கள்.

சாதாரண ஒரு பற்பசையை இதனை பட்டாணி அளவில் வைத்தாலே அதிக அளவில் நுரை வரும். இதில் பல நோய் எதிர்ப்பு சக்தி உள்ளது என்றெல்லாம் பொய் கூறி நம்பவைத்து அதிகமான விலையில் விற்பனை செய்வார்கள்.

இந்த வியாபாரத்தைப் பற்றி விளக்குகிறோம் என்ற பெயரில் ஸ்டார் ஹோட்டலில் கூட்டம் கூட்டி லேப்டாப்பில் பல விதமான காட்சிகளைக் காட்டுவார்கள். நான் மிகவும ஏழையாக இருந்தேன். இந்த வியாபாரத்தில் சேர்ந்தவுடன் மிகப் பெரும் பணக்காரானாகி விட்டேன் என்றெல்லாம் சிலர் பேசும் காட்சிகளைக் காட்டுவார்கள்.

உற்பத்திச் செலவு இரண்டாயிரம் உள்ள பொருளை இப்படி பலவிதமான பொய்களைக் கூறி ஏமாற்றி இருபதாயிரம் ரூபாய்க்கு விற்று விடுவார்கள்.

இங்கு சங்கிலித் தொடர் எப்படி வருகிறது என்று சொன்னால் நாம் ஒரு பொருளை வாங்கியவுடன் அந்தக் கம்பெனி பின்வருமாறு நம்மிடம் கூறும். நீங்கள் ஒரு ஐந்து உறுப்பினர்களிடம் இந்தப் படுக்கையை வாங்க வைத்தால் ஒவ்வொரு படுக்கைக்கும் உங்களுக்கு ஜந்தாயிரம் ரூபாய் கிடைக்கும் என்பார்கள். ஐந்து

உறுப்பினர்களை நாம் சேர்த்தால் நமக்கு இருபத்தைந்தாயிரம் ரூபாய் கிடைத்துவிடும்.

இந்தப் பணத்தை அடைவதற்காக கம்பெனி தன்னிடம் எதையெல்லாம் கூறி ஏமாற்றி விற்பனை செய்ததோ அது போன்று இவரும் தனக்கு கீழ் உள்ளவர்களிடம் கூறி வியாபாரம் செய்வார். இவருக்குக் கீழ் உள்ள ஐந்து பேரும் தங்களுக்குக் கீழ் தலா ஐந்து நபர்களைச் சேர்த்தால் இவருக்கு ஒரு இலட்சத்தி இருபத்தைந்தாயிரம் ரூபாய் இலாபமாகக் கிடைக்கும். இதிலிருந்து ஒரு குறிப்பிட்ட சதவிகிதத்தை தனக்கு கீழ் உள்ளவர்களுக்கு இலாபமாக வழங்குவார்.

ஒவ்வொருவரும் தான் யாரிடம் பொருள் வாங்கினோம் என்பதை மட்டும்தான் அறிவார்கள். யாரும் கம்பெனியோடு நேரடியாக தொடர்பு வைத்துக் கொள்ள முடியாது.

இது போன்ற பொருட்களை எந்தக் கடையிலும் வைத்து விற்பனை செய்ய மாட்டார்கள். ஏனென்றால் இதனை வாங்கிய மக்கள் உரிய பலன் கிடைக்காமல் ஏமாறும் போது இதனை விற்பனை செய்யும் மூலத்தைக் கண்டுபிடித்துவிடக் கூடாது என்பதற்காக இது போன்ற உறுப்பினர்கள் மூலமாக மட்டுமே வியாபாரம் செய்வார்கள்.

நாம் உதாரணத்திற்குத்தான் பொருட்களையும் அதற்கு வழங்கப்படும் இலாபத்தையும் குறிப்பிட்டுள்ளோமே தவிர பல கம்பெனிகள் பல பொருட்களைப் பல விதமான இலாப சதவிகிதத்தில் ஏமாற்றி விற்பனை செய்கின்றன.

இவ்வாறு பலவிதமான பொய்களைக் கூறி ஏமாற்றி செய்யப்படும் வியாபாரம் எப்படி ஹலாலான வியாபாரமாக இருக்க முடியும். ?

**மூன்றாவது வகை**

அன்றாடம் தேவைப்படக்கூடிய சில அவசியமான பொருட்களை ஒரு கம்பெனி தயார் செய்யும். உதாரணத்திற்கு சோப்பு, பவுடர், பேஸ்ட். சட்டை இது போன்ற பொருட்களைத் தயார் செய்யக் கூடிய ஒரு கம்பெனியாக இருக்கும்.

இவர்கள் தயார் செய்யும் பொருட்களை இவர்கள் கடைகளில் வைத்து விற்பனை செய்யாமல் ஆட்களைப் பிடித்து அவர்களின் மூலம் விற்பனை செய்வார்கள். இதற்கு அவர்கள் நிபந்தனை விதிப்பார்கள். யார் அவர்களுடைய கம்பெனியில் உறுப்பினர்களாக இணைகிறார்களோ அவர்களுக்கு மட்டும்தான் அவர்கள் வியாபாரச் சரக்கை வழங்குவார்கள். உறுப்பினர்களாக இல்லாதவர்கருக்கு வியாபாரச் சரக்கு வழங்க மாட்டார்கள்.

அவர்களுடைய கம்பெனியில் நாம் உறுப்பினராகச் சேர வேண்டும் என்று சொன்னால் நாம் குறிப்பிட்ட அளவு பணத்தைக் கட்ட வேண்டும். அதில் ஒரு கணிசமான தொகை உறுப்பினர் கட்டணம் என்று எடுத்துக் கொண்டு மீதித் தொகைக்கு நாம் வியாபாரம் செய்வதற்கு சரக்கு தருவார்கள்.

உதாரணத்திற்கு ஒருவர் 20,000 ரூபாய் செலுத்தினால் 10,000 ரூபாயை உறுப்பினர் கட்டணம் எனப் பிடித்துக் கொண்டு 10,000 ரூபாய்க்கு சரக்கு தருவார்கள். அவர்கள் நமக்கு குறிப்பிட்ட விலையில் சரக்கினைத் தருவார்கள். நாம் அதனை விற்றால் நமக்கு அதில் இலாபம் கிடைக்கும்.

இவ்வாறு மட்டும் இருந்தால் பிரச்சினை இல்லை என்று கூறிவிடலாம். ஆனால் இத்தோடு நில்லாமல் நீங்கள் விற்பனை செய்வதோடு நின்று விடாமல் நீங்கள் இரண்டு உறுப்பினர்களை எங்கள் கம்பெனியில் சேர்த்து விட்டால் அவர்கள் செய்யும் விற்பனையில் கிடைக்கும் இலாபத்திலிருந்து உங்களுக்கு நாங்கள் பங்கு தருவோம் என்று நமக்கு கூறுவார்கள்.

உதாரணத்திற்கு நாம் சேர்த்துவிடுகின்ற இருவர் ஒரு மாதத்திற்கு ஐம்பதாயிரம் ரூபாய்க்கு விற்பனை செய்தால் நமக்கு இலாபத்தில் இரண்டு சதவிகிதம் அல்லது குறிப்பிட்ட ஒரு அளவு பங்கு தருவார்கள்.

இத்தோடு நில்லாமல் நம்மால் சேர்த்து விடப்பட்ட இரண்டு பேர் ஒவ்வொருவரும் இன்னும் இரண்டு நபர்களைச் சேர்த்து விடுவார்கள். அவர்கள் செய்யும் விற்பனையிலிருந்தும் நமக்கு ஒரு குறிப்பிட்ட விகிதாச்சாரம் இலாபமாகக் கிடைக்கும்.

இவ்வாறு தொடர்ந்து சங்கிலி போன்று செல்லும் போது ஒவ்வொரு மட்டத்தினர் செய்கின்ற வியாபாரத்திலிருந்தும் முதலாமவருக்கு ஒரு குறிப்பிட்ட அளவு பங்கு கிடைக்கும். இப்படி ஒவ்வொரு நிலையில் உள்ளவர்களுக்கும் அவர்களுக்கு அடுத்த நிலையில் உள்ளவர்கள் செய்கின்ற வியாபாரத்தின் இலாபத்திலிருந்து ஒரு குறிப்பிட்ட பங்கு கிடைக்கும்.

சில நேரங்களில் 100 பேர் , 200 பேர் என்று அதிகமான நபர்கள் சங்கிலித் தொடராகச் சேரும் போது முதல் நிலையில் உள்ளவருக்கு இலட்சக்கணக்கில் வருமானம் கிடைக்கும்.

நம்முடைய எந்த முதலீடும் இல்லாமல் மற்றவர்கள் செய்கின்ற உழைப்பிற்கு நமக்கு லாபம் கிடைப்பது எப்படி மார்க்க அடிப்படையில் ஹலாலான சம்பாத்தியமாக இருக்க முடியும்?

நாம் எந்த வியாபாரமும் செய்யாமல் நமக்கு இலாபம் கிடைக்கிறது எனும் போது அது ஹராமானா சம்பாத்தியமாகத்தான் இருக்கும்.

நாம் சேர்த்து விடுவதினால் மட்டும் நமக்கு இலாபம் கிடைக்கும் என்பது நியாயமானது கிடையாது. ஒரு வாதத்திற்குச் சரி என்று வைத்து கொண்டாலும் முதல் இருவரைத்தான் நாம் சேர்த்து விடுகிறோம். அவர்களுக்குப் பின்னால் இணைபவர்கள் வியாபாரத்தில் இருந்தும் நமக்கு பங்கு வருகிறதே?

இப்படி இலாபம் கொடுக்க வேண்டும் என்பதற்காக குறைவான உற்பத்திச் செலவுள்ள பொருட்களைக் கூட பொய்களைச் சொல்லி அதிகமான விலைக்கு விற்பனை செய்ய வைக்கின்றார்கள்.

இப்படி பொய்களைச் சொல்லி விற்பனை செய்வதின் மூலம் அந்த வியாபாரம் ஹராமானதாக மாறிவிடுகிறது. பொதுவாக எந்தெந்த வியாபாரங்களில் எல்லாம் ஏமாற்றுதல், மோசடி, பொய் போன்றவை காணப்படுகிறதோ அவை அனைத்துமே ஹராமான வியாபாரங்கள்தான்.

வியாபாரத்தில் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நமக்கு உபதேசித்த சில போதனைகளை நாம் கவனத்தில் கொள்ள வேண்டும்.

அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள் :

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கல்லெறி வியாபாரத்திற்கும் மோசடி வியாபாரத்திற்கும் தடை விதித்தார்கள்.

(முஸ்லிம் 3033)

அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறினார்கள் :

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் ஓர் உணவு(தானிய)க் குவியலைக் கடந்து சென்றார்கள். (விற்பனைக்காக வைக்கப்பட்டிருந்த) அந்தக் குவியலுக்குள் தமது கையை அவர்கள் நுழைத்தார்கள். அப்போது (தானியக் குவியலில் இருந்த) ஈரம் அவர்களின் விரல்களில் பட்டது. உடனே அவர்கள் ”உணவு (தானியத்தின்) உரிமையாளரே! என்ன இது (ஈரம்)?” என்று கேட்டார்கள். அதற்கு அவர், ”இதில் மழைச் சாரல் பட்டுவிட்டது, அல்லாஹ்வின் தூதரே!” என்றார். அப்போது அவர்கள், ”ஈரமானதை மக்கள் பார்க்கும் விதமாக உணவு (தானியத்து)க்கு மேலே வைத்திருக்கக் கூடாதா?” என்று கேட்டுவிட்டு, ”மோசடி செய்தவர் என்னைச் சார்ந்தவர் அல்லர்” என்று கூறினார்கள்.

நூல் : முஸ்லிம் (164)

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள் :

விற்பவரும் வாங்குபவரும் பிரியாமலிருக்கும் வரை வியாபாரத்தை முறித்துக் கொள்ளும் உரிமை இருவருக்கும் உண்டு! அவ்விருவரும் உண்மை பேசிக் குறைகளைத் தெளிவுபடுத்தியிருந்தால் அவர்களுடைய வியாபாரத்தில் அருள்வளம் (பரக்கத்) அளிக்கப்படும்! குறைகளை மறைத்துப் பொய் சொல்லியிருந்தால் அவர்களின் வியாபாரத்தில் உள்ள அருள்வளம் நீக்கப்படும்!

இதை ஹகீம் பின் ஹிஸாம் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.

நூல்: புகாரி 2079

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள் : ஒரு முஸ்லிம் இன்னொரு முஸ்லிமிற்கு சகோதரன் ஆவான். ஒரு குறையுடைய பொருளை விற்கும்போது அதனைத் தெளிபடுத்தாமல் விற்பது ஒரு முஸ்லிமிற்கு ஆகுமானதல்ல.

அறிவிப்பவர் : உக்பா பின் ஆமிர் (ரலி)

நூல் : இப்னுமாஜா (2237)

**பங்குச் சந்தை மோசடி**

வட்டி தான் இந்தச் சீரழிவுக்குக் காரணம் என்றால் அதை மேலும் தீவிரப்படுத்தியது பங்குச் சந்தை எனும் சூதாட்டம் எனலாம்.

ஒரு நிறுவனத்தில் எவ்வளவு முதலீடு செய்யப்பட்டுள்ளதோ அது தான் அந்நிறுவனத்தின் உண்மையான மதிப்பு. ஆனால் ஒரு கோடி ரூபாய் முதலீடு செய்யப்பட்டுள்ள அல்லது இருப்பு வைத்துள்ள நிறுவனத்தின் பங்குகளை ஆயிரம் கோடி என்று மக்களை நம்ப வைத்து ஏமாற்றுவது தான் பங்குச் சந்தை. புரிந்து

கொள்வதற்காக சிறிய தொகையை உதாரணமாகக் கொண்டு இதைப் பின்வருமாறு விளக்குகிறோம்.

ஒரு நிறுவனத்தில் நூறு ரூபாய் அளவுக்குத் தான் இருப்பு உள்ளது. இதை நூறு பங்காக ஆக்கினால் ஒரு பங்கு ஒரு ரூபாய் தான். ஆனால் அந்த நிறுவனம் முக்கியமான பொருளைத் தயாரிக்கிறது. அதன் பங்குகளை வாங்கினால் அதை விட அதிகமான தொகைக்கு ஏமாளிகள் தலையில் கட்டலாம் என்று ஆசை காட்டி ஒரு ரூபாய் பங்கை பத்து ரூபாய்க்கு விற்கின்றனர்.

இப்படி நூறு பங்கையும் வாங்கியவர்கள் ஒன்று கூடி அந்த நிறுவனத்தை தங்கள் கையில் எடுத்தால் அதில் நூறு ரூபாக்குத் தான் சரக்கு இருக்கும். ஆனால் இவர்கள் இதற்கு அழுதது 1000 ரூபாய்.

உண்மை மதிப்பை விட ஏன் அதிகம் கொடுத்து வாங்குகிறார்கள்? அந்தக் கம்பெனியில் அவ்வளவு இருப்பு உள்ளது என்பதற்காக அல்ல. அந்தக் கம்பெனியின் பங்குகளை வாங்குவது அதன் உரிமையாளராவதற்காக அல்ல. மாறாக பத்து ரூபாய்க்கு வாங்கியதை எவன் தலையிலாவது அதை விட அதிகமாகக் கட்டி விடலாம் என்பது தான் காரணம். இந்த மோசடியை உலகிற்குக் கற்றுத் தந்தவர்கள் அமெரிக்கர்கள் தான். பைசா பெறுமானமில்லாத நிறுவனங்களின் பங்குகளை செயற்கையாக ஏற்றி கோடி கோடியாகச் சுரண்டினார்கள்.

வங்கிகள் திவாலான பின் அனைத்து நிறுவனங்களும் இனி மேல் தாக்குப் பிடிக்க முடியாது என்ற நிலை ஏற்பட்டது. ஒரு லட்சம் டாலருக்கு பங்கு வாங்கியவன் அதை ஆயிரம் ரூபாய்க்குக் கூட விற்க முடியாத நிலை. இதுவும் அமெரிக்காவை அதள பாதாளத்துக்குக் கொண்டு சென்று விட்டது.

இவ்வளவு நடந்த பின்பும் மீண்டும் பங்குச் சந்தை சூதாட்டத்தை தூக்கி நிறுத்தவும் வங்கிகள் மீண்டும் வட்டித்தொழில் செய்ய மக்களின் பணத்தை அள்ளி

இறைப்பதைக் காணும் போது இவர்கள் இந்த வீழ்சிக்கான காரணத்தைக் கூட அறியவில்லை என்பது தெளிவாகிறது.

வியாபாரத்தில் சூது, ஏமாற்றுதல், செயற்கையாக மதிப்பை அதிகப்படுத்துதல் போன்ற அயோக்கியத்தனங்களை இஸ்லாம் தடை செய்துள்ளது. இதை விளங்கி நடந்திருந்தால் இந்த அவல நிலை ஏற்பட்டிருக்காது என்று அடித்துச் சொல்ல முடியும்.

**தவணை வியாபாரம்**

பொருட்களை தவணை அடிப்படையில் விற்பனை செய்வது தவறல்ல. தவணையில் வட்டி என்ற அம்சம் சேரக்கூடாது. தவணைக்காக கூடுதல் பணம் வாங்கினால் அது வட்டியாகிவிடும். பணத்தை உடனடியாக கொடுத்தால் ஒரு விலையும் கடனாக கொடுத்தால் இன்னொரு விலையும் வைக்கக்கூடாது.

உதாரணமாக உடனடியாக பணம் கொடுத்தால் ஒரு சோப்பின் விலை 10 ரூபாய் என்றால் இதை கடனாக வாங்கினால் 12 ரூபாய் என்று கடனுக்காக விலையை கூட்டினால் இது வட்டியாகும். அதே நேரத்தில் உடனடியாக பணம் கொடுத்தாலும் தாமதமாக பணம் கொடுத்தாலும் பொருளின் மதிப்பு 12 ரூபாய் தான் என்று முடிவு செய்தால் இது வட்டியாகாது.

இங்கே ஒரு முக்கியமான விசயத்தை கவனிக்க வேண்டும். ரொக்கத்திற்கு ஒரு மதிப்பும் கடனுக்கு ஒரு மதிப்பும் வைப்பதே தவறு. கடனுக்காக அல்லாமல் வேறு காரணங்களுக்காக இரண்டு விலை வைப்பது தவறில்லை.

சில்லறையாக வாங்குபவருக்கு ஒரு விலையும் மொத்தமாக வாங்குபவருக்கு ஒரு விலையும் வைத்து விற்பனை செய்யலாம். ஒரு பொருளை ஒருவருக்கு 50 ரூபாய்க்கு விற்கும் போது இன்னொருவருக்கு நமது லாபத்தை குறைத்து 45 ரூபாய்க்கு விற்கலாம். இது நம்முடைய உரிமையை விட்டுக்கொடுப்பதாகும். இதற்கு மார்க்கத்தில் எந்தத் தடையுமில்லை.

**ஏலச் சீட்டு**

ஏலச் சீட்டுத் திட்டத்தில் சுமார் 10 பேர் இணைந்திருந்தால் இவர்களில் ஒருவர் இதில் இணைந்த அனைவரிடமும் மாதம் மாதம் பணத்தை வசூலித்து இதை நடத்தும் பொறுப்பாளராக இருப்பார்.

ஒவ்வொருவரும் மாதம் 1000 ரூபாய் என்ற வீதம் 10 மாதத்துக்கு கட்டுவார்கள். ஒவ்வொரு மாதத்திலும் ஒரு லட்சம் ரூபாய் சேர்ந்தவுடன் அனைவரும் கூடுவார்கள். பிறகு இந்தப் பணத்தை வாங்குவதற்கு போட்டி நடக்கும்.

யார் அதிகமான வட்டி செலுத்துவதாக ஒத்துக்கொள்கிறாரோ அவருக்கு பணம் ஒப்படைக்கப்படும். அதாவது ஒருவர் 90 ஆயிரம் எனக்கு கொடுத்தால் போதும். 10 ஆயிரம் ரூபாயை நான் பொதுவில் விட்டு விடுகிறேன் என்று கேட்பார். இன்னொருவர் 80 ஆயிரம் கொடுத்தால் போதும். 20 ஆயிரம் ரூபாயை பொதுவில் விட்டு விடுகிறேன் என்று கேட்பார். இன்னொரு நபர் 70 ஆயிரம் கொடுத்தால் போதும். 30 ஆயிரம் ரூபாயை பொதுவில் விட்டு விடுகிறேன் என்று கேட்பார்.

இம்மூவரும் 10 மாதத்தில் ஒரு லட்சம் ரூபாய் கட்டுவார்கள் என்றாலும் சீக்கிரமாக பணத்தை வாங்குவதற்காக ஒரு லட்சத்தை வாங்காமல் அதை விடக் குறைவானத் தொகையை பெற சம்மதிக்கிறார்கள்.

இவர்களில் 70 ஆயிரம் ரூபாயை கேட்டவர் அதிகமான பணத்தை கொடுக்க முன்வருவதால் இவருக்கு 70 ஆயிரம் ரூபாய் பணம் உடனடியாக தரப்படும். ஆனால் இவர் இதற்குப் பிறகும் 10 மாதம் வரை மாதம் மாதம் ஆயிரம் ரூபாய் கட்ட வேண்டும். மொத்தத்தில் ஒரு லட்சம் கட்ட வேண்டும்.

இந்தக் குழுவின் தலைவர் ஒரு லட்சத்தில் 70 ஆயிரம் ரூபாயை இவருக்கு கொடுத்துவிட்டு மீதமுள்ள 30 ஆயிரம் ரூபாயை மற்ற ஒன்பது பேருக்கும் சமமாக பிரித்து வழங்குவார்.

இது தெளிவான வட்டியாகும். கடனுக்காக கூடுதல் தொகை கொடுப்பதும் கூடுதல் தொகை வாங்குவதும் வட்டியாகும். இந்த இரு அம்சங்களும் இதில் அடங்கியுள்ளது. இதில் பலர் கூட்டு சேர்ந்து வட்டித் தொழில் செய்கின்றனர்.

ஒரு லட்சம் ரூபாயை வாங்க வேண்டியவன் தனக்கு உடனே பணம் கிடைக்கின்றது என்பதற்காக 10 ஆயிரத்தையோ 20 ஆயிரத்தையோ 30 ஆயிரத்தையோ கூடுதலாக கொடுக்கின்றான். இதில் இணைந்த ஒவ்வொருவரும் பணத்தை வாங்கும் போது வட்டி கொடுப்பவராகவும் பணத்தை விட்டுக் கொடுக்கும் போது வட்டி வாங்குபவராகவும் இருக்கின்றனர்.

**பிராவிடண்டு ஃபண்ட்**

அரசாங்கம் அரசு ஊழிகயர்களின் மாத வருமானத்தில் குறிப்பிட்ட அளவை மாதம் மாதம் எடுத்துக்கொள்ளும். ஊழியர்களின் எதிர்கால நன்மைக்காக அரசாங்கம் இதை கட்டாயமாக செய்து வருகின்றது.

ஊழியர்களுக்கு திடீர் தேவைகள் ஏற்பட்டாலோ அல்லது பணிக்காலத்தை முடித்து ஓய்வு பெறும்போதோ இந்தத் தொகை முழுவதையும் அரசாங்கம் ஒப்படைக்கும். ஆனால் இதனுடன் கூடுதலான வட்டிப் பணத்தையும் சேர்த்துக்கொடுக்கும்.

நமது சம்பளத்தில் பிடிக்கப்பட்டத் தொகை 5 லட்சம் என்றால் அரசாங்கம் ஒரு லட்சத்தை வட்டியாக சேர்த்து 6 லட்சம் வழங்கும். பெரிய அளவிலான சில தனியார் நிறுவனங்களிலும் இந்தத் திட்டம் கட்டாயமாக கடைபிடிக்கப்படுகின்றது.

ஊழியர்களின் விருப்பத்தைக் கேட்காமல் வலுக்கட்டாயமாக வாங்கப்படுவதால் இது நிர்பந்தமான நிலையாகும். இயன்றவரை அரசாங்கம் தரும் கூடுதல் வட்டிப் பணத்தை வாங்காமல் நம் சம்பளத்தில் பிடிக்கப்பட்ட தொகையை மட்டும் வாங்க முயற்சிக்க வேண்டும்.

அல்லது நமது பணத்துக்கு அரசாங்கம் கொடுக்கும் வட்டிப் பணத்தை அப்படியே விட்டு விட்டு லோன் கேட்டு நமக்குரிய அசல் தொகையை மட்டும் வாங்கிக்கொண்டால் வட்டி வாங்குவதிலிருந்து தப்பிக்கலாம்.

# அனுமதிக்கப்பட்டவை

**மருத்துவக் காப்பீடு**

மருத்துவக் காப்பீடு நிறுவனத்தில் சேர விரும்புபவர் குறிப்பிட்ட தொகையை செலுத்தி குறிப்பிட்ட காலத்துக்கு உறுப்பினராக இருப்பார்.

உதாரணமாக ஒருவருடத்துக்கு 4000 ஆயிரம் ரூபாய் ஒருவர் செலுத்துகிறார். இந்தத் தொகையை உறுப்பினரின் வயது உடல் நிலை ஆகியவற்றை கவனத்தில் கொண்டு நிறுவனே முடிவு செய்யும். எல்லோருக்கும் ஒரே மாதிரியான தொகையை நிர்ணயிக்கமாட்டார்கள். இந்த ஒருவருடத்துக்குள் இவருக்கு நோய்கள் ஏதாவது ஏற்பட்டால் இந்த நிறுவனம் அவருக்கு இலவசமாக மருத்துவம் செய்யும்.

அவர்கள் செலுத்திய தொகையை விட அதிகமாக செலவு ஏற்பட்டாலும் அதை இந்த நிறுவனம் ஏற்றுக்கொண்டு மருதுவம் செய்யும். காப்பீடு செய்த காலத்துக்குள் அவருக்கு எந்த நோயும் ஏற்படவில்லை என்றாலோ அல்லது இவருடைய மருத்துவத்திற்கு ஆன செலவு இவர் நிறுவனத்திடம் செலுத்திய தொகையை விட குறைவாக இருந்தாலோ நிறுவனம் இவர் செலுத்திய பணத்தை திருப்பிக்கொடுக்காது. இதற்கு மருத்துவக் காப்பீடு என்று சொல்லப்படுகின்றது.

இம்முறையில் வட்டி எதுவும் இல்லை. 4000 ஆயிரம் ரூபாயை வாங்கிக் கொண்டு திருப்பித் தரும் போது 5000 ரூபாய் தருவேன் என்று சொன்னால் தான் வட்டி. ஆனால் மருத்துவக் காப்பீட்டில் நாம் செலுத்திய அசல் பணமே நமக்கு கிடைக்காது என்றால் அதை விட கூடுதலான பணத்துக்கு பேச்சே இல்லை. அதுவும் கிடைக்காது. எனவே இதில் வட்டி இல்லை.

இதில் இணைந்தவர்கள் நமக்கு நோய் வந்தால் இதன் மூலம் பயனடைவோம். நமக்கு நோய் வராவிட்டால் யாருக்கு நோய் வருகின்றதோ அவருக்கு நம் பணம் பயன்படட்டும் என்று மனிதாபிமான அடிப்படையில் தன்னுடைய பணத்தை விட்டுக்கொடுக்கின்றனர்.

பத்து பேர் ஒன்று கூடி ஒவ்வொருவரும் ஆயிரம் ரூபாய் போட்டு ஒரு ஒப்பந்தம் செய்துகொள்கிறார்கள். திடீரேன நமக்கு பெரிய நோய் வந்துவிட்டால் அதை நம்மால் சமாளிக்க இயலாது. எனவே நம்மில் யாருக்காவது நோய் வந்துவிட்டால் நம் அனைவருடைய பணத்தையும் அவருக்கு விட்டுக்கொடுப்போம் என்று ஒப்பந்தம் செய்கின்றனர். மருத்துவக் காப்பீடு என்பது இது போன்றதாகும்.

பெரும்பாலும் பெரிய செலவை ஏற்படும் பயங்கரமான நோய்கள் அனைவருக்கும் ஏற்படுவதில்லை. சமுதாயத்தில் குறிப்பிட்ட சிலருக்கே ஏற்படுகின்றது. இந்த சில நோயாளிகளுக்கு மற்றவர்களின் பணம் உதவுகின்றது. இதை நடத்தும் நிறுவனம் இதன் மூலம் இலாபமும் அடைகின்றது.

இதில் வட்டியோ மோசடியோ இல்லை. மனிதாபிமானத்துடன் கூடிய சுய பாதுகாப்புத் தன்மையே இதில் உள்ளது. திடீரென பெரிய நோய்கள் வந்துவிட்டால் மருத்துவ செலவுக்காக அடுத்தவரிடம் கையேந்தாமல் இதன் மூலம் மருத்துவம் செய்து தன்மானத்தை காத்துக்கொள்ள முடியும்.

மருத்துவக் காப்பீட்டில் இன்னொரு நன்மையும் உள்ளது. பொதுவாக ஒரு சிறிய நோய்க்கு மருத்துவம் செய்வதற்காக மருத்துவர்களை அணிகினால் நம்மிடமிருந்து பணத்தை பறிப்பதற்காக தேவையில்லாத பரிசோதனைகளை செய்யச் சொல்வார்கள். தேவையற்ற மருந்துகளையும் வாங்கச் சொல்வார்கள். இதனால் நம்முடைய பொருளாதாரமும் உடல் நலமும் கெடுகின்றது.

மருத்துவக் காப்பீட்டில் இந்த பாதிப்புகள் நமக்கு ஏற்படாது. நமக்குத் தேவையான வைத்தியத்தை மட்டுமே பார்ப்பார்கள். எனவே மருத்துவக் காப்பீடு செய்வது பல வகைகளில் நமக்கு நன்மையாக உள்ளது.

**மருத்துவக் காப்பீடு சூதாட்டமா?**

மருத்துவக் காப்பீடு கூடாது என்பதற்கு சிலர் தவறான காரணங்களை கூறுகின்றனர். இவர்களின் கூற்று ஏற்புடையதாக இல்லை.

காய்கள் பழுப்பதற்கு முன்பாக அவை மரத்தில் இருக்கும் நிலையில் அவற்றுக்காக விலை பேசுவதை நபி (ஸல்) அவர்கள் தடுத்துள்ளார்கள். இதை சுட்டிக்காட்டி மருத்துவ காப்பீடும் இதைப் போன்றது என சிலர் கூறுகின்றனர்.

காய்கள் கனிந்து பறிக்கப்படுவதற்கு முன்பாக விலை பேசினால் வாங்குபவருக்கும் விற்பவருக்கும் நஷ்டம் ஏற்பட வாய்ப்புள்ளது. அதிகக் கனிகளை குறைந்த விலைக்கு விற்பதன் மூலம் விற்றவர் நஷ்டப்படுவார். விலை பேசப்பட்ட காய்கள் முறையாகக் கனியாமல் அழிந்து விட்டால் வாங்கியவர் நஷ்டப்படுவார்.

இந்த வியாபாரத்தில் குறிப்பிட்ட கனிகளுக்கு ஒப்பந்தம் செய்யப்படுகின்றது. அதனடிப்படையில் கொடுக்கல் வாங்கல் நடைபெறுகின்றது. இந்த ஒப்பந்தத்திற்கு மாற்றமாக முடிவு ஏற்பட்டால் விற்பவரோ வாங்குபவரோ ஏமாற்றப்பட்டு விடுகின்றார்.

செய்யப்பட்ட ஒப்பந்தத்தின் அடிப்படையில் முடிவு அமையவில்லை. இதில் ஒப்பந்த மீறல் இருக்கின்றது. இதன் காரணத்தால் இதை மார்க்கம் தடை செய்கின்றது.

ஆனால் மருத்துவ காப்பீடு என்பது மேற்கண்ட வியாபாரத்தைப் போன்று ஏமாறுவதற்கு சாத்தியக்கூறுகள் உள்ளதல்ல. செய்யப்பட்ட ஒப்பந்தத்திற்கு மாற்றமாக நடக்கும் எந்த அம்சமும் இம்முறையில் இல்லை.

இதில் இணையும் அனைவரும் இந்தத் திட்டத்தால் தனக்கு பயன் கிடைக்கலாம்; கிடைக்காமலும் போகலாம் என்பதை அறிந்து கொண்டு தான் இணைகிறார்கள். இவர்கள் ஒப்பந்தம் செய்தபடி நோய் ஏற்பட்டவர்கள் பலனடைகிறார்கள். நோய் ஏற்படாதவர்கள் தங்கள் பணத்தை விட்டுத் தருகின்றனர். செய்யப்பட்ட ஒப்பந்தம் அப்படியே நடைமுறைப்படுத்தப்படுகின்றது. எனவே இதை மேற்கண்ட தடை செய்யப்பட்ட வியாபாரத்துடன் ஒப்பிடக் கூடாது.

அடுத்து மருத்துவக் காப்பீடு நிறுவனங்கள் இதன் மூலம் அதிக லாபம் ஈட்டுவதை சிலர் விமர்சனம் செய்கின்றனர். ஒரு வியாபாரத்தில் அதிக லாபம் வருவதால் அது கூடாத வியாபாரமாகி விடாது. இஸ்லாம் தடை செய்யாத வியாபாரத்தில் எவ்வளவு அதிகமாக லாபம் வந்தாலும் அது தவறல்ல.

மேலும் இந்த நிறுவனங்கள் வட்டித் தொழிலில் ஈடுபடாமல் இருப்பதில்லை என்றும் கூறுகின்றனர். இவ்விஷயத்தில் மருத்துவக் காப்பீடு செய்பவருக்கும் அந்த நிறுவனத்துக்கும் இடையே செய்யப்பட்ட ஒப்பந்தத்தில் வட்டி அம்சம் உள்ளதா? என்று பார்க்க வேண்டும்.

அவர்கள் நம்மிடம் ஒப்பந்தம் செய்யும் போது நோய் ஏற்படாதவர்கள் கொடுத்த பணத்திலிருந்தே நோய் ஏற்பட்டவர்களுக்கு மருத்துவம் செய்வதாகத் தெரிவிக்கின்றனர்.

இந்த ஒப்பந்தத்தில் வட்டி இல்லையென்பதால் இது அனுமதிக்கப்பட்ட வியாபாரம். இதன் பிறகு அவர்கள் நமது பணத்தை வாங்கி என்ன செய்தாலும் அதற்கு நாம் பொறுப்பாளியாக மாட்டோம்.

மேலும் இந்த முறை சூதாட்டத்தைப் போன்று உள்ளது என்றும் கூறுகின்றனர். மருத்துவ காப்பீடு செய்வதும் சூதாட்டமும் ஒரே மாதியானதல்ல. இரண்டிற்கும் இடையே பெரிய வேறுபாடுகள் உள்ளன.

சூதாட்டத்தில் பங்குகொண்டவர்கள் ஒவ்வொருவரும்., தானே வெற்றி பெற்று அனைவரின் பொருளையும் பெற வேண்டும் என்று பேராசைப்படுவார்கள். தோல்வியுற்றவர்கள் தங்களுடைய பொருள் தவறிவிட்டதே என வயிற்றெரிச்சல் படுவார்கள். வெற்றி பெற்றவன் மீது பொறாமைப்படுவார்கள்.

அடுத்தவன் பொருளை எடுக்க வேண்டும் என்ற பேராசையினாலும் இழந்த தன்னுடைய பொருளை மீட்க வேண்டும் என்ற வெறியினாலும் எதை வேண்டுமானாலும் வைத்து சூதாட முன்வருவார்கள். இறுதியில் அனைத்தையும் இழந்து மன உளைச்சலுடனும் ஏமாற்றத்துடனும் வெறுங்கையோடு திரும்புவார்கள். இதனால் தான் சூதாட்டத்தில் பிரச்சனைகளும் சண்டைகளும் எழுகின்றன. இதனால் இது தடைசெய்யப்பட்டுள்ளது.

ஆனால் மருத்துவக் காப்பீடு என்பது இது போன்றதல்ல. இத்திட்டத்தில் சேர்ந்தவர்கள் நோயுற்றால் தான் இதன் மூலம் பலனடைய முடியும். இந்தப் பலனை அடைவதற்காக தான் நோயுற வேண்டும் என யாரும் விரும்ப மாட்டார்கள். நோயுற்றவர் பலனடைந்தால் அவரைப் பார்த்து மற்றவர்கள் பொறாமைப்பட மாட்டார்கள்.

மனிதாபிமான அடிப்படையில் அனைவரின் ஒப்புதலுடனும் நோயுற்றவருக்காக மற்றவர்களின் பணம் செலவிடப்படுகின்றது. இதில் போட்டி பொறாமை ஏமாற்றம் வயிற்றெரிச்சல் ஆகிய அம்சங்கள் எதுவுமில்லை. எனவே மருத்துவக் காப்பீடு செய்வது தவறான ஒன்றல்ல.

**வாகனக் காப்பீடு**

வாகனம் வாங்குபவர்கள் கண்டிப்பாக இந்த இன்சூரன்ஸ் செய்யாமல் வாகனம் வாங்க முடியாது. இந்த சட்டத்தால் இந்த இன்சூரன்ஸை செய்ய வேண்டிய நிர்பந்த நிலைக்கு நாம் ஆளாகிறோம்.

என்றாலும் மார்க்க அடிப்படையில் இதில் தவறான அம்சங்கள் எதுவும் இல்லை. இதுவும் மெடிக்கல் இன்சூரன்ஸை ஒத்து இருக்கின்றது.

விபத்தில் மூன்று வகைகளில் பாதிப்பு ஏற்படலாம். ஒன்று எதிரில் வருபவர்களுக்கு ஏற்படும் பாதிப்பு. இரண்டாவது நாம் ஓட்டிய வாகனத்துக்கு ஏற்படும் பாதிப்பு. மூன்றாவது வாகனத்தை ஓட்டியவருக்கு ஏற்படும் பாதிப்பு. இப்படி மூன்றுவிதமான பாதிப்புகள் ஏற்படும்.

நாம் வாகனத்தை ஓட்டிச் சென்று ஒருவன் மீது மோதி அவன் இறந்து விட்டால் இஸ்லாமிய சட்ட அடிப்படையில் அவனுடைய குடும்ப நிலையை பார்த்து அவனுக்கு நஷ்டயீடு கொடுக்க வேண்டும்.

ஒருவர் வாகனம் ஓட்டிச் சென்று எதிரில் வருபவர் மீது தெரியாமல் மோதி அவர் இறந்துவிட்டால் மோதியவர் ஏழை என்பதால் அவரால் நஷ்டயீடு கொடுக்க முடியாது.

இவர் வாகனக் காப்பீடு செய்திருந்தால் மூன்று வகையான பாதிப்புகளில் எவ்வகையில் பாதிப்பு இருந்தாலும் அந்த நிறுவனமே அந்த பாதிப்புக்கு பொறுப்பேற்கும். அதற்குரிய நஷ்ட ஈட்டுத்தொகையை வழங்கும்.

வாகனம் வாங்கும் போது இந்த இன்சூரன்ஸ் நிறுவனம் இந்த வகைக்காக ஒரு குறிப்பிட்ட தொகையை வாங்கிக்கொள்கிறது. இதன் பிறகு நாம் ஒருவர் மீது மோதி அவர் மரணத்திதாலோ அல்லது வாகனத்துக்கு பாதிப்பு ஏற்பட்டாலோ அல்லது நமக்கு பாதிப்பு ஏற்பட்டாலோ அதற்கான உதவித் தொகையை அந்த நிறுவனம் வழங்கும்.

அப்படி எதுவும் ஆகவில்லையென்றால் நாம் கொடுத்த பணம் திரும்ப வராது. இவ்வாறு கூறித்தான் அனைவரிடமும் பணம் வாங்கப்படுகிறது.

இந்தத் திட்டத்தின் கீழ் இணைந்துகொண்டவர்களில் விபத்தை சந்திப்பவர்களும் உண்டு. விபத்து நேராதவர்களும் உண்டு. விபத்து நேராதவர்கள் தங்கள் பணத்தை விபத்து நேர்ந்தவர்களுக்காக விட்டுத் தருகின்றனர். வீட்டுக்கும் வியாபாரக் கடைகளுக்கும் இவ்வாறு இன்சூரன்ஸ் செய்யமுடியும்.

இதில் வட்டி இல்லை. அதற்கான சாயலும் இல்லை. இது ஒரு கூட்டு உதவித் திட்டமாகவே உள்ளது. எனவே இதில் இணைவது அனுமதிக்கப்பட்ட ஒன்றாகும்.

**குலுக்கல் சீட்டு**

இந்தத் திட்டத்தை நடத்தக்கூடிய பொறுப்பாளர் ஒருவர் இருப்பார். இவர் இதில் இணைந்த ஒவ்வொருவரிடமும் மாதம் மாதம் ஒரு குறிப்பிட்டத் தொகையை வசூலிப்பார்.

அனைவரின் பெயரையும் தனித் தனி சீட்டுகளில் எழுதி குலுக்கல் போடுவார். இதில் யாருடைய பெயர் வருகின்றதோ அவரிடம் அந்த மாதத்தில் கிடைத்த மொத்த தொகையையும் ஒப்படைப்பார். தான் ஆற்றிய பொறுப்புக்காக ஒரு சிறிய தொகையை மட்டும் இதில் எடுத்துக்கொள்வார்.

உதாரணமாக பத்து நபர்கள் சேர்ந்து 10 மாதத்துக்கு குலுக்கல் சீட்டுத் திட்டத்தில் சேருகிறார்கள். ஒவ்வொருவரும் மாதம் மாதம் ஆயிரம் ரூபாய் கொடுக்க வேண்டும். எனவே ஒவ்வொரு மாதத்திலும் ஒரு லட்சம் ரூபாய் கிடைக்கும்.

குலக்கல் சீட்டை நடத்தகூடியவர் இதில் உள்ள அனைவரின் பெயரையும் தனித் தனித் தாள்களில் எழுதி சீட்டுக் குலுக்கிப் போடுவார். யாருடைய பெயர் வருகின்றதோ அவரிடம் அந்த ஒரு லட்சத்தை ஒப்படைப்பார். இந்தப் பணியை செய்ததற்கு கூலியாக ஆயிரம் ரூபாயை எடுத்துக் கொண்டு மீதம் 99 ஆயிரம் ரூபாயை கொடுப்பார்.

இந்த திட்டத்தில் வெளிப்படையில் மார்க்கத்திற்கு மாற்றமான எந்த அம்சமும் இல்லை என்றாலும் வட்டியின் சாயல் இதில் தென்படுவதால் குலுக்கல் சீட்டு நடத்தக்கூடியவர்கள் 1000 ரூபாய் பிடிப்பதை தவிர்த்துக்கொள்ள வேண்டும்.

சீட்டு யாருக்கு விழுந்ததோ அவர் கடன் வாங்குபவர் ஆவார். சீட்டை நடத்தக்கூடியவர் கடன் தரக்கூடியவராக உள்ளார். இந்நிலையில் பணத்தைக் கொடுத்துவிட்டு அவரிடமிருந்து 1000 ரூபாயை வாங்கினால் இது வட்டியாகவேத் தெரிகிறது. எனவே இதை தவிர்க்க வேண்டும்.

**வங்கியுடன் வியாபார ஒப்பந்தம்**

வட்டித் தொடர்புடைய வேலைகைளை செய்து கொடுப்பதே தவறு. நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் வட்டி தொடர்புடைய வேலைகளைச் செய்பவர்களை சபித்துள்ளார்கள்.

வட்டி வாங்குபவரையும், வட்டி கொடுப்பவரையும், அதை எழுதிக் கொடுப்பவர்களையும், அதன் இரு சாட்சிகளையும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் சபித்தார்கள்.

அறிவிப்பவர்: ஜாபிர் (ரலி)

நூல்: முஸ்லிம் (3258)

வட்டிப் பணத்தை வசூலித்தல் வட்டிக்கு கணக்குப் பார்த்தல் வட்டிப் பணத்தை வழங்குதல் இதை ஆர்வமூட்டி பிரச்சாரம் செய்தல் போன்ற வேலைகள் வட்டி தொடர்புடைய வேலைகள் என்பதால் இவற்றைச் செய்வது கூடாது

நாம் செய்கின்ற வேலை பொதுவாக அனுமதிக்கப்பட்ட காரியமாக இருந்தால் அதை வங்கிக்கும் செய்து கொடுக்கலாம். நாம் செய்கின்ற வேலை வட்டியுடன் நேரடியாக சம்பந்தப்படுகின்றதா? என்று கவனிக்க வேண்டும்.

உதாரணமாக வங்கியின் கட்டுமானப் பணிகளில் ஈடுபடுவது வெள்ளையடிப்பது எலக்ட்ரிக் பிரச்சனைகளை சரிசெய்வது போன்றவை வட்டியுடன் தொடர்புடைய பணிகள் அல்ல. இவை பொதுவாக அனுமதிக்கப்பட்டவை.

நாம் ஆகுமான ஒரு பொருளை விற்கின்றோம். நம்மிடமிருந்த அதை வாங்கியவன் அதை முறைகேடாக பயன்படுத்தினால் அதற்கு நாம் பொறுப்பாளியாகமாட்டோம்.

தொலைக்காட்சியை நல்ல நிகழ்ச்சிகளைப் பார்ப்பதற்கும் பயன்படுத்தலாம். மார்க்கம் தடுத்துள்ள நிகழ்ச்சிகளைப் பார்ப்பதற்கும் பயன்படுத்தலாம்.

இந்நிலையில் தொலைக்காட்சியை ரிப்பேர் செய்து கொடுக்கும் தொழில் செய்கின்ற ஒருவரிடம் மார்க்கம் தடுத்துள்ள நிகழ்ச்சிகளைப் பார்க்கின்ற ஒருவர் தன்னுடைய தொலைக்காட்சியை சரி செய்வதற்காகக் கொடுக்கின்றார். இப்போது தொலைக்காட்சியை ரிப்பேர் செய்து கொடுப்பவரை தீமைக்கு துணை செய்பவர் என்று யாரும் கூறுவதில்லை.

ஒருவர் ஆட்டோ ஓட்டும் தொழில் செய்கின்றார். அதில் ஏறிய பயணி தன்னை சினிமா தியேட்டரில் விடுமாறு கூறினால் ஆட்டோ ஓட்டுநர் தீமைக்குத் துணை செய்து விட்டார் என்று யாரும் கூறுவதில்லை.

எனவே பொதுவாக அனுமதிக்கப்பட்ட வேலைகளை வங்கிக்கு செய்து கொடுத்தால் அதில் தவறேதுமில்லை.

**வங்கியில் பணத்தை சேமிக்கலாமா?**

வங்கி வட்டி அடிப்படையில் இயங்கும் நிறுவனமாக இருப்பதால் நாம் கொடுக்கும் பணத்தை வங்கி வட்டித் தொழிலுக்கு பயன்படுத்தலாம். எனவே வங்கியில் நம் பணத்தை போடக்கூடாது என்று சிலர் கூறுகின்றனர்.

ஒருவரிடத்தில் நம் பணத்தை ஒப்படைக்க நினைக்கும் போது அவர் நாணயமானவரா என்பதை மட்டுமே கவனத்தில் கொள்ள வேண்டும். மற்ற விசயங்களில் அவர் மோசமானவராக இருந்தாலும் சரியே.

ஒருவர் ஐந்து நேரத் தொழுகை உட்பட வணக்க வழிபாடுகளை அதிகம் செய்யக்கூடியவராக இருக்கின்றார். ஆனால் இவரிடத்தில் பணத்தை கொடுத்தால் திருப்பித்தரமாட்டார். இந்த விசயத்தில் இவரிடம் கோளாறு உள்ளது. அதே நேரத்தில் ஒரு இறைமறுப்பாளன் பண விசயத்தில் மிகவும் நாணயமானவாக இருக்கின்றான்.

இப்போது நாம் யாரிடத்தில் பணம் கொடுப்போம்? யாரிடத்தில் பணம் கொடுத்தால் நமக்கு திருப்பிக் கிடைக்குமோ அவரிடத்திலே கொடுப்போம். அவர் மற்ற பாவங்களை செய்யக்கூடியவராக இருந்தாலும் சரியே.

இந்த அடிப்படையில் தான் நாம் வங்கியில் பணம் சேமித்து வைக்கின்றோம். வங்கி வட்டித் தொழிலை செய்யக் கூடிய நிறுவனமாக இருந்தாலும் நாணயம் பொருளின் பாதுகாப்பு ஆகியவற்றை கவனித்தால் இன்றைய சூழலில் வங்கி சேமிப்பே பாதுகாப்பானதாக உள்ளது.

ஒரு தனி மனிதரிடம் கொடுத்தால் அந்த மனிதர் ஏமாற்ற வாய்ப்புள்ளது. அல்லது அவருக்கு திடீரென நஷ்டம் ஏற்பட்டு திவாலாகிவிட வாய்ப்புள்ளது. யாரிடத்திலும் கொடுக்காமல் வீட்டிலே வைத்திருப்பதும் பாதுகாப்பானதாக இல்லை. ஆனால் வங்கியில் இது போன்ற பாதிப்புகள் ஏற்படுவது மிகக் குறைவாகும். வங்கியை அரசாங்கம் நடத்துவதால் நட்டம் ஏற்பட்டாலும் அரசாங்கம் அதற்கு பொறுப்பேற்றுக்கொண்டு மக்களுக்கு பணம் கிடைத்துவிடும்.

எனவே நாணயம் பாதுகாப்பு ஆகியவற்றை கவனித்தால் வங்கியில் பணம் சேமிப்பதைப் போன்ற பாதுகாப்பு வேறு எதிலும் இல்லை என்று கூறலாம்.

ஒருவருடன் கொடுக்கல் வாங்கலில் ஈடுபடும் போது நாணயத்தை மட்டுமே பார்க்க வேண்டும். இதைத் தாண்டி வேறு எதையும் பார்க்க வேண்டியதில்லை. இதற்கு குர்ஆனும் நபிமொழிகளும் ஆதாரமாக உள்ளது.

நபி (ஸல்) அவர்கள் காலத்தில் வேதம் கொடுக்கப்பட்டவர்களான யூதர்கள் வட்டித் தொழில் செய்து வந்தனர். இவர்களில் சிலர் மிகவும் நாணயமாக நடந்துகொண்டனர். இத்தகையவர்களிடத்தில் நமது பொருளை கொடுத்து வைக்கலாம் என்று குர்ஆன் அனுமதிக்கின்றது.

நம்பி, ஒரு குவியலையே ஒப்படைத்தால் உம்மிடம் திருப்பித் தருவோரும் வேதமுடையோரில் உள்ளனர். நீர் நம்பி ஒரு தங்கக் காசை ஒப்படைத்தால் நிலையாய் நின்றால் தவிர உம்மிடம் திருப்பித் தராதோரும் அவர்களில் உள்ளனர்.

அல்குர்ஆன் (3 : 75)

நபி (ஸல்) அவர்கள் யூதர்களிடத்தில் அடைமானம் வைத்துள்ளார்கள்.

நபி (ஸல்) அவர்கள் ஒரு யூதரிடம் குறிப்பிட்ட தவணையில் திருப்பித் தருவதாக உணவுப் பொருளை வாங்கினார்கள். (அதற்காக) அவரிடம் தமது இரும்புக் கவசத்தை அடைமானமாக வைத்தார்கள்.

அறிவிப்பவர்: ஆயிஷா (ரலி), நூல்: புகாரி (2068)

இந்த ஹதீஸின் அடிப்படையில் தங்க நாணயத்தை யூதரிடம் நாம் அடைமானம் வைக்கலாம். யூதன் நம்மிடமிருந்து வாங்கிய நாணயங்களை வைத்து வட்டி சம்பாதித்தால் அதற்கு நாம் பொறுப்பாளியாக மாட்டோம்.

வங்கியுடன் நாம் செய்து கொள்ளும் ஒப்பந்தத்தில் மார்க்கத்திற்கு மாற்றமான விசயங்கள் எதுவும் இருக்கின்றதா? எனப் பார்க்க வேண்டும்.

வங்கியில் புதிதாக அக்கவுண்ட் திறப்பவர்கள் நான் கொடுக்கும் பணத்தை வங்கி வைத்திருக்க வேண்டும். நான் கேட்கும் நேரத்தில் எனக்கு கொடுக்க வேண்டும் என்று ஒப்பந்தம் செய்கின்றனர்.

நாம் விரும்பிய நேரத்தில் நம் பணத்தை பெற்றுள்கொள்ள முடியும். இதில் மார்க்கத்திற்கு மாற்றமான எந்த அம்சமும் இல்லை. எனவே இது அனுமதிக்கப்பட்டதாகும்.

நம்மிடமிருந்து வாங்கப்பட்ட பணம் தவறான தொழிலுக்கு பயன்படுகின்றதே என்ற கேள்வி தேவையற்றது. நமக்குத் தொடர்பில்லாத விசயங்களுக்கு நாம் குற்றவாளியாக மாட்டோம்.

நாம் பாட்டல்களில் தண்ணீர் அடைத்து விற்பனை செய்கிறோம். ஒருவன் நம்மிடமிருந்து தண்ணீர் பாட்டலை வாங்கி மதுவுடன் கலந்து குடித்தால் இதில் நமக்கு எந்த குற்றமும் வராது.

நம்மிடமிருந்து தீப்பெட்டியை விலைக்கு வாங்கி அதை சிகிரெட் பிடிப்பதற்கு ஒருவன் பயன்படித்தினாலும் நாம் மீது குற்றம் வராது. வங்கியில் பணத்தை சேமிப்பது இது போன்றதாகும்.

## வட்டிக்குப் கடன் வாங்கி முதலீடு செய்யப்பட்ட வியாபாரத்தில் வேலை செய்யலாமா?

நண்பர் ஒருவர் வட்டிக்கு கடன் வாங்கி ஒரு வியாபாரத்தில் முதலீடு செய்கிறார். அதை நிர்வகித்து வேலை செய்யும் பொறுப்பை நம்மிடம் ஒப்படைக்கின்றார். கிடைக்கும் லாபத்தில் 30 சதவீதம் லாபம் தருவதாக கூறுகிறார். இந்த சம்பாத்தியம் ஆகுமானதா என்ற கேள்வி சிலருக்கு எழுகின்றது.

கிடைக்கும் லாபத்தில் 30 சதவீதம் பங்கு வாங்குவதை சம்பளம் என்று கூற முடியாது. ஏனென்றால் வியாபாரத்தில் லாபம் அதிகரிக்கும் போது நமக்கு பணம்

கூடுதலாகக் கிடைக்கும். நஷ்டம் ஏற்படும் போது நமக்கு நஷ்டம் ஏற்படும். இது போன்ற பிரச்சனை கூட்டு சேர்ந்து வியாபாரம் செய்யும் பாட்னர்களுக்கே ஏற்படும்.

எனவே இந்தத் தொழிலில் நாம் நம்முடைய நண்பருடன் கூட்டு சேர்ந்து வியாபாரம் செய்கிறோம். நண்பர் முதலீடு செய்துள்ளார். நாம் நம்முடைய உழைப்பைக் கொடுக்கின்றோம்.

ஒரு வியாபாரத்தில் கூட்டுச் சேருபர்கள் கவனிக்க வேண்டியது என்னவென்றால் எந்த வியாபாரத்தை நடத்தப் போவதாக முடிவெடுக்கப்பட்டிருக்கின்றதோ அந்த வியாபாரம் மார்க்கத்தில் ஹலாலா? அல்லது ஹராமா? என்று பார்க்க வேண்டும்.

எந்த வியாபாரத்தைத் தனியாக நடத்துவதை மார்க்கம் தடை செய்கின்றதோ அதைக் கூட்டு சேர்ந்து நடத்தினாலும் தவறு தான். எந்த வியாபாரத்தைத் தனியாக நடத்த அனுமதியுள்ளதோ அதைக் கூட்டாக சேர்ந்து நடத்துவதற்கும் அனுமதியுள்ளது.

உதாரணமாக வட்டிக் கடை மதுக்கடை ஆகியவற்றை நடத்த கூட்டு சேருவது கூடாது. அதே நேரத்தில் மளிகைக் கடை நடத்துவதற்குக் கூட்டுச் சேர்ந்தால் அதில் தவறில்லை.

எனவே செய்யப்படும் தொழில் ஹலாலாக இருக்கும் பட்சத்தில் அதில் ஒர்கிங் பாட்னராக வேலை செய்வது பணம் சம்பாதிப்பது தவறில்லை. நண்பர் வட்டிக்கு வாங்கி முதலீடு செய்திருப்பதால் அந்த வியாபாரத்தில் கிடைக்கும் பங்கு ஆகுமானதல்ல என்று கூற முடியாது.

கடன் கொடுத்து வட்டி வாங்குவதற்கும், வட்டிக்குக் கடன் வாங்குவதற்கும் வித்தியாசம் இருக்கின்றது. நண்பர் பிறருக்குக் கடன் கொடுத்து அதற்காக அவர் வட்டி வாங்கினால் அந்த வட்டிப் பணம் தான் அவருக்கு ஹராமாகும்.

பிறரிடம் கடன் வாங்கி வாங்கிய பணத்துக்காக வட்டி கட்டும் போது இதனால் கடன் வாங்கப்பட்ட பணம் ஹராமாகி விடாது. மாறாக வட்டிக்குத் துணை நின்றார் என்ற குற்றம் மட்டுமே ஏற்படும். அந்த வகையில் நண்பர் குற்றவாளியாகிறார். ஆனால் அவர் வியாபாரத்தில் முதலீடு செய்த பணம் ஹராமாகாது.

நாமும் அவரும் சேர்ந்து வங்கியில் கூட்டாகக் கடன் வாங்கினால் அந்தப் பாவத்தில் நமக்கும் பங்கு உண்டு. அவர் மட்டும் தனிப்பட்ட முறையில் வட்டிக்கு கடன் வாங்கி அந்தக் கடனில் நமக்கு எந்தப் பொறுப்பும் இல்லாமல் ஒர்க்கிங் பார்ட்னராக நாம் இருந்தால் நம் மீது எந்தக் குற்றமும் இல்லை.

இந்த வியாபாரத்தில் நமக்கும், நண்பருக்கும் இடையேயுள்ள ஒப்பந்தம் மார்க்க வரம்புகளுக்கு உட்பட்டு இருக்கின்றதா? என்பதை மட்டும் நாம் கவனித்தால் போதும். நண்பர் எந்த வழியில் பணத்தைப் பெற்று முதலீடு செய்திருந்தாலும் அதில் நமக்கு எந்த சம்பந்தமும் இல்லை.

நாம் வேலை பார்க்கின்றோம். அந்த வேலைக்காக 30 சதவிகிதம் பங்கு தரப்படுகின்றது. நமக்கு பணம் வருகின்ற வழி ஹலாலாக இருக்கின்றது. நண்பருக்கு இந்தப் பணம் ஹலாலான வழியில் வந்ததா? என்று பார்க்க வேண்டியதில்லை.

## வட்டி வாங்குவோர் தரும் உணவை உண்ணலாமா?

பொதுவாக உணவைப் பொறுத்தவரை குறிப்பிட்ட சில உணவுகள் தான் முழுமையாக தடைசெய்யப்பட்ட உணவுகளாக உள்ளது. பன்றி இறைச்சி இரத்தம் இறந்துபோன உயிரினங்கள் அல்லாஹ் அல்லாதோருக்காக பலியிடப்பட்ட பிராணிகள் ஆகியவை ஒருவரிடமிருந்து இன்னொருவருக்கு எந்த வகையில் கைமாறினாலும் கைமாறாவிட்டாலும் இவை ஹராம். யாரும் இதை சாப்பிடக்கூடாது.

இவையன்றி பொதுவாக அனுமதிக்கப்பட்ட பொருட்கள் நிறைய உள்ளது. பணம் அரிசி கோதுமை இன்னும் ஏராளமான பொருட்கள் உள்ளது. இவற்றை ஒருவர் தவறான அடிப்படையில் சம்பாதித்தால் தவறான அடிப்படையில் இந்தப்

பொருட்களை சம்பாதித்தற்கான பாவத்தை சுமப்பார். இதனால் இவை பயன்படுத்த தடைசெய்யப்பட்ட பொருட்களாகிவிடாது.

வட்டி வாங்குவோருடைய வீட்டின் நிழலில் கூட நாம் நிற்கக்கூடாது என்று ஒரு தவறானக் கருத்து மக்களிடம் பரவியுள்ளது. ஒருவர் தவறான முறையில் பொருளீட்டினாலும் அவரிடமிருந்து அந்தப் பொருள் அவருடைய நண்பருக்கு ஆகுமான வழியில் கிடைத்தால் அந்த நண்பருக்கு அந்தப் பொருள் ஆகுமானதாகும்.

ஒருவரிடமிருந்து நமக்கு பொருள் வரும் வழி சரியான வழியா என்று பார்த்தால் போதும். அவருக்கு அந்தப் பொருள் எப்படி வந்தது என்று நாம் யோசிக்க வேண்டியதில்லை. அவர் அந்தப் பொருளை எந்த முறையில் பெற்றாலும் அதற்கு அவரே பொறுப்பாளி. அது குறித்து அல்லாஹ் நம்மிடம் கேட்க மாட்டான்.

உதாரணமாக நாம் ஒரு வியபாரியாக இருக்கின்றோம். நம்மிடம் பலர் வந்து பணம் கொடுத்து பொருட்களை வாங்கிச் செல்கிறார்கள். வருவோரில் ஹராமான வழியில் பொருளீட்டியவர்களும் ஹலாலான வழியில் பொருளீட்டியவர்களும் இருப்பார்கள். இந்த வியபாரத்தில் இந்தப் பொருள் நுகர்வோருக்கு எப்படி வந்திருந்தாலும் அதை நாம் பொருட்படுத்துவதில்லை. நாம் பொருள் தருகிறோம். அவர்கள் பணம் தருகிறார்கள் என்பதை மட்டுமே கவனிக்கின்றோம். இதேப் போன்று தான் இந்தப் பிரச்சனையும் அமைந்துள்ளது.

நபி (ஸல்) அவர்கள் காலத்தில் யூதர்கள் வட்டித்தொழில் செய்து வந்தனர். அதன் வருமானத்தையே உண்டு வந்தனர். இதைப் பின்வரும் வசனங்களிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

யூதர்கள் செய்த அநீதியின் காரணமாகவும், அல்லாஹ்வின் பாதையை விட்டும் அதிகமானோரை அவர் கள் தடுத்ததன் காரணமாகவும், வட்டியை விட்டு அவர்கள் தடுக்கப்பட்டிருந்தும் வட்டி வாங்கியதாலும், மக்களின் செல்வங்களைத்

தவறான முறையில் அவர்கள் சாப்பிட்ட தாலும் அவர்களுக்கு அனுமதிக்கப்பட்டிருந்த தூய்மையானவற்றை அவர்களுக்கு விலக்கினோம். அவர்களில் (நம்மை) மறுப்போருக்குத் துன்புறுத்தும் வேதனையைத் தயாரித்துள்ளோம்.

அல்குர்ஆன் (4:161)

வட்டியை உண்போர் (மறுமை நாளில்) ஷைத்தான் தீண்டியவனைப் போல் பைத்தியமாகவே எழுவார்கள். "வியாபாரம் வட்டியைப் போன்றதே" என்று அவர்கள் கூறியதே இதற்குக் காரணம். அல்லாஹ் வியாபாரத்தை அனுமதித்து வட்டியைத் தடை செய்து விட்டான். தமது இறைவனிடமிருந்து அறிவுரை தமக்கு வந்த பின் விலகிக் கொள்பவருக்கு முன் சென்றது உரியது. அவரைப் பற்றிய முடிவு அல்லாஹ்விடம் உள்ளது. மீண்டும் செய்வோர் நரகவாசிகள். அதில் நிரந்தரமாக இருப்பார்கள்.

அல்குர்ஆன் (2:275)

இந்நிலையில் வட்டித் தொழில் செய்து வந்த யூதர்கள் தரும் அன்பளிப்புகளை நபி (ஸல்) அவர்கள் மறுக்காமல் ஏற்றுக் கொண்டார்கள்.

அனஸ் ரலி) அவர்கள் கூறினார்கள் :

யூதப் பெண் ஒருத்தி நபி (ஸல்) அவர்களீடம் விஷம் தோய்க்கப்பட்ட ஓர் ஆட்டை அன்பளிப்பாகக் கொண்டு வந்தாள். நபி (ஸல்) அவர்கள் அதிலிருந்து (சிறிது) உண்டார்கள். "அவளைக் கொன்று விடுவோமா?" என்று (நபி (ஸல்) அவர்களிடம்) கேட்கப்பட்டது. அவர்கள், "வேண்டாம்" என்று கூறி விட்டார்கள். நபி (ஸல்) அவர்களின் தொண்டைச் சதையில் அந்த விஷத்தின் பாதிப்பை நான் தொடர்ந்து பார்த்து வந்தேன்.

புகாரி (2617)

நபி (ஸல்) அவர்கள் காலத்தில் வேறு கொள்கையில் இருந்த மன்னர்கள் நபியவர்களுக்கு அன்பளிப்புகளை வழங்கினார்கள். பொதுவாக அன்றைய காலத்தில் மன்னர்கள் தவறான அடிப்படையில் பொருளீட்டக்கூடியவர்களாக இருந்தாலும் அவர்களிடமிருந்து அன்பளிப்பு என்ற ஆகுமான வழியில் பொருள் தனக்கு வரும்போது அதை நபி (ஸல்) அவர்கள் ஏற்றுக்கொண்டார்கள்.

அபூ ஹுமைத் அஸ் ஸாஇதீ (ரலி) அவர்கள் கூறினார்கள் :

நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் தபூக் போரில் கலந்து கொண்டோம். "அய்லா'வின் அரசன் நபி (ஸல்) அவர்களுக்கு ("தல்தல்' எனும்) வெள்ளை நிறக் கோவேறுக் கழுதை ஒன்றை அன்பளிப்புச் செய்தான். நபி (ஸல்) அவர்கள் அவனுக்குச் சால்வையொன்றை(அனுப்பி) அணிவித்தார்கள். மேலும், நபி (ஸல்) அவர்கள் இஸ்லாமிய அரசின் கீழ் கட்டுப்பட்டு இருக்கும்படியும் அவனுக்கு எழுதினார்கள்.

புகாரி (3161)

அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள் :

தூமத்துல் ஜந்தலின் அரசர் உகைதிர், நபி (ஸல்) அவர்களுக்கு அன்பளீப்புகளை அனுப்பினார்.

புகாரி (2616)

யூதர்கள் வட்டி வாங்கி சம்பாதித்து இருந்தாலும் அவர்களிடமிருந்து வந்த அன்பளிப்புகளை நபி (ஸல்) அவர்கள் ஏற்றார்கள். யூதர்களிடமிருந்து தனக்கு இந்த பொருட்கள் எவ்வாறு வந்தது என்பதை மட்டுமே நபி (ஸல்) அவர்கள் பார்த்துள்ளார்கள். அதாவது அன்பளிப்பு என்ற ஆகுமான வழியில் வந்துள்ளது.

யூதர்கள் இந்த அன்பளிப்புகளை ஹராமான வழியில் சம்பாதித்து இருக்கின்றார்கள். எனவே நாம் இதை வாங்கக் கூடாது என்று நபி (ஸல்) அவர்கள் முடிவு எடுக்கவில்லை.

மேலும் நபி (ஸல்) அவர்கள் யூதர்களிடம் ஜிஸ்யா என்ற வரியை வாங்கினார்கள். யூதர்களின் சம்பாத்தியம் ஹராமானதாக இருந்தாலும் அதைப் பற்றி பொருட்படுத்தாமல் இந்த வரியை வசூலித்தார்கள்.

நபி (ஸல்) அவர்கள் காலத்தில் எதிரிகள் ஹராமான முறையில் சம்பாதித்து வந்தார்கள். இவர்கள் போர்களத்தில் விட்டுச் சென்ற கனீமத் பொருட்களை நபியவர்கள் எடுத்து பயன்படுத்தினார்கள். இது ஹராமானது என்று அவர்கள் ஒதுக்கவில்லை.

எனவே ஒருவரிடமிருந்து நமக்குப் பொருள் வந்தால் அவரிடமிருந்து நமக்கு பொருள் வந்த வழி சரியாக இருக்கின்றதா என்பதை மட்டுமே நாம் கவனிக்க வேண்டும். இவ்வாறு தான் நபி (ஸல்) அவர்கள் பார்த்துள்ளார்கள்.

அனஸ் (ரலி) அவர்கள் கூறினார்கள் :

பரீராவுக்கு தர்மமாகக் கொடுக்கப்பட்ட இறைச்சி நபி (ஸல்) அவர்களிடம் கொண்டு வரப்பட்டது. அப்போது அவர்கள் இது பரீராவுக்குத் தர்மமாகும்; ஆனால் நமக்கு அன்பளிப்பாகும்“ என்றார்கள்.

புகாரி (1495)

எனவே வட்டி வாங்கி சம்பாதித்த ஒருவர் அன்பளிப்பு விருந்து என்ற ஆகுமான வழியில் நமக்கு ஏதேனும் கொடுத்தால் அதை பெறுவது தவறில்லை.

அதே நேரத்தில் ஒருவர் தீமை செய்திருப்பதை நாம் காணும் போது சம்பந்தப்பட்டவரிடம் அவர் செய்த தவறை சுட்டிக் காட்டுவது நமது கடமையாகும்.

எனவே வட்டி எவ்வளவு பெரிய பாவம் என்பதை அவருக்கு விளக்கிக் கூற வேண்டும்.

**வட்டிக்கு கடன் வாங்கி கட்டிய வீட்டில் வசிக்கலாமா?**

தந்தை வட்டிக்கு கடன் வாங்கி வீடு கட்டினால் அவர் வட்டி செலுத்தும் குற்றத்தை செய்திருக்கிறார் என்று சொல்லலாம். ஆனால் அவர் கடனாக வாங்கிய பணம் ஹராமானது என்று கூற முடியாது. அந்த பணத்தை வைத்து அவர் கட்டிய வீடும் ஹராமான பொருள் என்று கூற முடியாது. ஒரு ஹராமான செயலுக்குத் துணை செய்த குற்றமே அவரைச் சேரும்.

தந்தை ஹராமான வழியில் சம்பாதித்த பணத்தைக் கொண்டு வீடு கட்டி இருந்தால் அது அவருக்குத் தான் ஹராம். வாரிசு உரிமைப்படி அச்சொத்து பிள்ளைகளுக்கு வந்தால் அதை பிள்ளைகள் தாரளமாக எடுத்துக் கொள்ளலாம். பிள்ளைகளுக்கு அது ஹலாலாகும்.

ஏனென்றால் அந்த வீடு தந்தையிடமிருந்து பிள்ளைகளுக்கு கிடைத்த வழி ஆகுமானதா? என்று மட்டுமே பார்க்க வேண்டும். தந்தைக்கு அந்த வீடு எப்படி கிடைத்தது என்று பார்க்க வேண்டியதில்லை.

அந்த வீடு வாரிசு உரிமைப்படி பிள்ளைகளுக்கு வருவதால் இது மார்க்கம் அனுமதித்த வழியிலேயே பிள்ளைகளுக்கு வருகின்றது. எனவே அதை பிள்ளைகள் தாராரளமாக பயன்படுத்திக் கொள்ளலாம்.

**உழைக்காமல் லாபம் வாங்கலாமா?**

நாம் வியாபாரத்தில் முதலீடு மட்டும் செய்திருப்போம். வேறு ஒருவர் அந்த வியாபாரத்தை நடத்துவார். கிடைக்கும் வருமானத்தில் குறிப்பிட்ட அளவு நமக்குக் கொடுப்பார்.

இந்த வியாபாரத்தில் பணத்தை கொடுத்ததைத் தவிர வேறு எந்த வேலையையும் நாம் செய்யவில்லை. வேலை செய்யாமல் பணம் வாங்குகின்றோம். இது வட்டியைப் போல் உள்ளதே என்று சிலருக்கு சந்தேகம் எழுகின்றது.

இது வட்டி இல்லை. பணத்தைக் கொடுத்து லபாத்தை மட்டும் எதிர்பாப்பது தான் வட்டி. கடன் வாங்கியவர் லாபம் அடைந்தாலும் நஷ்டம் அடைந்தாலும் கடன் கொடுத்தவர் இதைப் பற்றி கவலைப்படாமல் வட்டியை கண்டிப்பாக வாங்கிடுவார்.

ஆனால் வியாபாரத்தில் பணத்தை முதலீடு செய்பவர் வியாபாரத்தில் கிடைக்கும் லாபத்தில் பங்கெடுப்பதைப் போன்று நஷ்டத்திலும் பங்கெடுக்க வேண்டும். லாபம் குறைந்தால் இவருக்கு கிடைக்க வேண்டிய தொகையும் குறையும். லாபம் அதிகரித்தால் இவருக்கு கிடைக்கும் தொகையும் அதிகரிக்கும். லாபமே வராமல் நஷ்டம் ஏற்பட்டாலும் அதிலும் இவர் பங்கெடுப்பார். எனவே இந்த ஒப்பந்தத்தின் அடிப்படையில் பணத்தைக் கொடுத்தால் இது வட்டியாகாது.

இந்த அடிப்படையில் நபி (ஸல்) அவர்களும் நபித்தோழர்களும் பொருள் ஈட்டியுள்ளார்கள். நபி (ஸல்) அவர்கள் கைபர் நிலத்தை யூதர்களிடம் கொடுத்தார்கள். யூதர்கள் அந்த நிலத்தில் வேலை செய்து வருகின்ற வருமானத்தில் பாதியை நபி (ஸல்) அவர்களுக்கு கொடுத்தார்கள். மீதமுள்ள பாதியை தாங்கள் வேலை செய்ததற்கு கூலியாக எடுத்துக்கொண்டார்கள்.

அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

விளைச்சலில் பாதி தரப்படும் என்ற அடிப்படையில், கைபருடைய நிலங்களை உழைத்துப் பயிரிட்டுக்கொள்வதற்காக, யூதர்களுக்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் வழங்கினார்கள்.

நூல் : புகாரி (2285)

நபி (ஸல்) அவர்கள் உடல் உழைப்பு எதையும் செய்யவில்லை. தன்னுடைய நிலத்தை மட்டுமே கொடுத்தார்கள். கிடைக்கும் லாபம் நஷ்டத்தில் பங்கேற்கக்கூடியவர்களாக இருந்தார்கள்.

மதீனாவிலிருந்த அன்சாரித் தோழர்கள் மக்காவிலிருந்து வந்த முஹாஜிர்களுடன் இந்த அடிப்படையில் வியாபார ஒப்பந்தம் செய்துகொண்டார்கள்.

அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள் :

முஹாஜிர்கள் (மக்காவிலிருந்து) மதீனாவுக்கு வந்தபோது அவர்களின் கையில் (செல்வம்) எதுவும் இருக்கவில்லை. அன்சாரிகள் நிலங்களையும் (பிற) அசையாச் சொத்துக்களையும் வைத்திருந்தார்கள். ஒவ்வோர் ஆண்டும் தங்கள் சொத்துக்களின் விளைச்சல்களை அவர்களுக்கு (குறிப்பிட்ட விகிதத்தில்) கொடுப்பதாகவும் 'எங்களுக்கு பதிலாக நீங்கள் அதில் சிரமப்பட்டு உழைக்க வேண்டும்' என்ற நிபந்தனையின் பேரிலும் அவற்றை முஹாஜிர்களுக்கு (குத்தகை நிலங்களாகப்) பங்கிட்டுக் கொடுத்தார்கள்.

நூல் : புகாரி (2630)

### வட்டியில் மாட்டிக் கொண்டவருக்கு உதவி செய்யலாமா?

வட்டி வாங்குவதும் வட்டி கொடுப்பதும் பாவமான காரியமாகும். ஒருவர் வட்டி வாங்கிவிட்டு அதிலிருந்து விடுபட முடியாமல் மிகவும் சிரமப்பட்டால் வட்டிப் பணம் உட்பட கடன் முழுவதையும் அவர் சார்பில் மற்றவர்கள் அடைக்கலாமா? இவ்வாறு அடைத்தால் வட்டிக்கு துணைபோன குற்றம் ஏற்படுமா? என்று சிலருக்கு சந்தேகம் ஏற்படுகின்றது.

பொதுவாக ஒருவர் வட்டிப் பணம் கட்ட நாம் உதவியாக இருப்பது மார்க்க அடிப்படையில் தவறாகும். ஏனென்றால் பாவமான விசயங்களில் உதவிக்கொள்ளக் கூடாது என்று அல்லாஹ் கூறுகிறான்.

நன்மையிலும், இறையச்சத்திலும் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளுங்கள்! பாவத்திலும், வரம்பு மீறலிலும் ஒரு வருக்கொருவர் உதவிக் கொள்ளாதீர்கள்! அல்லாஹ்வை அஞ்சுங்கள்! அல்லாஹ் கடுமையாகத் தண்டிப்பவன்.

அல்குர்ஆன் (5 : 2)

ஆனால் வட்டிக்கு கடன் வாங்கியவன் பொருளாதாரத்தில் அதள பாதாளத்தில் இருப்பதை கண்கூடாகப் பார்க்கின்றோம். அவன் அசலைக் கூட கட்டுவதற்கு வழியில்லாமல் சிரமப்படுகிறான்.

இவனுக்கு நாம் உதவி செய்யாவிட்டால் வட்டி மெம்மேலும் பெருகி காலம் முழுவதும் கஷ்டப்படுவான். இந்நேரத்தில் மனிதாபிமான அடிப்படையில் இவனுக்கு உதவி செய்ய வேண்டும். இவனுடைய சுமையை இறக்கி வைக்க வேண்டும்.

உதவி செய்வது நமக்கு நிர்பந்தமாக இல்லாவிட்டாலும் இந்த உதவியை வாங்கும் நிர்பந்தம் அவனுக்கு உள்ளது. மார்க்கத்தில் பிறருக்கு நிர்பந்தம் ஏற்பட்டாலும் அது நீங்க உதவி செய்யலாம்.

ஒருவனுக்கு மார்க்கத்தில் தடைசெய்யப்பட்ட பொருளைக் கொண்டு வைத்தியம் செய்ய வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டுள்ளது. வைத்தியம் செய்யும் மருத்துவருக்கு இது நிர்பந்தம் இல்லாவிட்டாலும் அவனுக்கு நிர்பந்தம் என்பதால் இந்த சிகிச்சையை செய்யலாம்.

இந்த அடிப்படையில் வட்டியில் சிக்கிக் கொண்டு மீள முடியாமல் தவிப்பவர்களுக்கு உதவி செய்து வட்டியிலிருந்து மீட்கலாம். இவ்வாறு செய்தால் ஒருவனுக்கு உதவி நன்மையும் பாவத்திலிருந்து அவனை மீட்ட நன்மையும் கிடைக்கும்.